

ஹரி ஓம் தத் ஸத்
பரப்ரஹ்மணே நம :

# வேதாந்த சூளா மணி

துறைமங்கலம் ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள்
இயற்றிய நூலின் சாரமான வினவிடை



வெளியீடு :
ஸ்ரீ சாந்தானந்த சுவாமிகள்
அறக்கட்டளை,
இராஜபாளையம்.
10—9—94.



ஹரி ஓம் தத் ஸத்
பரப்ரஹ்மணே நம :

# வேதாந்த சூளா மணி

துறைமங்கலம் ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள்
இயற்றிய நூலின் சாரமான வினாவிடை



வெளியீடு :
ஸ்ரீ சாந்தானந்த சுவாமிகள்
அறக்கட்டளை,
இராஜபாளையம்.
10—9—94.

Visalatchi Meyyappan.

10-2



ஹரி ஓம் தத் ஸத்
பரப்ரஹ்மணே நம :

# வேதாந்த சூளா மணி

துறைமங்கலம் ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள்
இயற்றிய நூலின் சாரமான வினாவிடை



வெளியீடு :
ஸ்ரீ சாந்தானந்த சுவாமிகள்
அறக்கட்டளை,
இராஜபாளையம்.
10—9—94.

10-9-1994ம் தேதியன்று நடைபெற்ற
ஸ்ரீ சாந்தானந்த சுவாமிகள் அவர்களின்
ஐந்தாவது குருபூஜை விழாவில்
ஸ்ரீ சாந்தானந்த சுவாமிகள்
அறக்கட்டளையால்
வெளியிடப்பட்டது.



ச்ருங்கேரி ஜகத்குரு
ஸ்ரீஸ்ரீ அபிநவ வித்யாதீர்த்த மஹாசுவாமிகள்



ச்ருங்கேரி ஜகத்குரு
ஸ்ரீஸ்ரீ பாரதீதீர்த்த மஹாசுவாமிகள்

உ

ஸ்ரீ சற்குருவே நம:

# முன்னுரை

'அனைவரும் விரும்புவது 'துன்பம் கலவாத இன்பமே'. இதனை 'சர்வ துக்க நிவர்த்தி பரமானந்தப் பிராப்தி' என்பர். 'அறிவு அற்றம் காக்கும் கருவி' 'அறிவுடையார் எல்லாம் உடையார்'. ஞானம் அடைந்தவர் இன்பம் அடைவர். ஞானம் பெறுவதற்கு நூல்கள் சிறந்த துணையாகும். அந்நூல்களுள் சிறந்தவை வேதாந்த நூல்களேயாகும். ஆன்மாவைப் பற்றியும். அனான்மாவைப் பற்றியும் அறிவதே ஞானமாகும்.

ஆன்மாவைப் பற்றியும், உலகைப்பற்றியும் உள்ள அனைத்துத் தத்துவங்களையும், அழகிய முறையில் நிஜகுணயோகி யென்னும் பெரியார் அருளிச் செய்ததே விவேக சிந்தாமணி என்பது கன்னட மொழி மூல நூலாகும். இவ்வரிய நூலை யாவரும் அறிந்து உய்யும்வண்ணம் துறைமங்கலம் ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள் தமிழில் செய்யுள் வடிவில் முன்னூறு ஆண்டுகளுக்கு முன்னால், 185 விருத்தப்பாக்களில் மொழிபெயர்த்துள்ளார்கள். இந்நூலில் காண்பான் - காட்சி என்னும் பொருள்பற்றி விளக்கப்பட்டுள்ளது. இவ்வரிய நூலுக்கு அருணாசல சுவாமிகளின் விரிவுரையும், அதற்கு வடிவேலு செட்டியார் அவர்களின் குறிப்புரையும் உள்ளன. மேற்படி நூலின் விரிவை சுருக்கியும், விளக்கியும், வினாவிடையாக எளிதில் உணருமாறு எழுதப்பட்டுள்ள இவ்வரிய நூலினை அனைவரும் பயன்படுத்தி தெளிந்த ஞானம்பெற்று இன்புற பிரம்மஸ்ரீ சாந்தானந்த சுவாமிகள் அவர்களின் நினைவாக அவர்களது ஐந்தாவது குருபூஜை விழாவில் ஸ்ரீ சாந்தானந்த சுவாமிகள் அறக்கட்டளையின் வாயிலாக வெளியிடுவதில் மிக்க பெருமிதமும், மனநிறைவும் அடைகிறேன். குருவின் அருளால் எல்லோரும் நன்மை அடைவோமாக.

அன்பன்,

குருபக்தமணி **P. R. ராமசுப்பிரமணிய ராஜா,**

மேனேஜிங் டிரஸ்டி,

**ஸ்ரீ சாந்தானந்த சுவாமிகள் அறக்கட்டளை.**

இராஜபாளையம்,
10—9—1994.



ஸ்ரீ சாந்தானந்த சுவாமிகள்

# ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமிகள் அவர்களின் வாழ்க்கைச் சுருக்கம்

உலகிலுள்ள சகல ஜீவர்களும் விரும்புவது துக்க நிவிருத்தியும், சுகப் பிராப்தியுமேயாகும்.

இத்தகைய நிலையையே மோக்ஷம் அதாவது பேரின்ப வீடு என்று அறிவிற்சிறந்த ஆன்றோர்கள் கூறியிருக்கின்றனர். இத்தகைய மோக்ஷமாகிய பேரின்பவீடு அடைவதற்குச் சாதனமாக உள்ளது ஆத்ம ஞானமாம்

அத்தகைய ஆத்மஞானத்திற்குச் சாதனமாக உள்ளது ஆத்ம அநாத்ம விசாரமாகிய 'அஹம்பிரஹ்மாஸ்மி' என்னும் அனுபூதி மகா வாக்கிய விசாரமாம். அத்தகைய அனுபூதி மகாவாக்கிய விசாரத்திற்குச் சாதனமாக உள்ளது ஞானகுருவின் 'தத்துவமஸி' என்னும் உபதேச மகாவாக்கிய சிரவணமாம்

இத்தகைய உபதேச மகாவாக்கிய சி ர வ ண ம் செய்வதற்குச் சாதனமாக உள்ள சாதன சதுட்டயத்தை அடைந்து ஆத்மஞான உபதேசம் பெறுவதற்காக ஞானகுருவைச் சரணுகதி அடைதலாம்.

இத்தகைய ஞான குருவைச் சரணுகதியடையும் மனோநிலைக்கு ஆக்கந்தரும் சாதனங்கள் பலவற்றுள் ஒன்ருயுள்ளது ஞானகுருவின் சரித்திரத்தை அறிவதாம்.

## ஸ்ரீ சாந்தானந்த சுவாமிகள் ஜனனம்

ஸ்ரீ சாந்தானந்த சுவாமிகள் அவர்கள் தேவாலயங்களும், தெய்வ பக்தி, பக்தியிற் சிறந்த ஞானிகளாகிய சான்ரோர்களும்மிகுந்த அருட் செல்வமும் பொருந்திய இராஜபாளையம் என்னும் ஊரில் ஜனனமாயினர். பூர்வாஸ்ரமத்தில் நீராத்துலிங்கம் எனப் பெயர்பெற்று ஏட்டுக் கல்வியில் நாட்டமில்லாமல், ஆத்ம ஞானத்தில் ஆர்வம்கொண்டு ஆலய வழிபாடுகளும், யோக ஞான சாத்திரங்களைப் பயின்று தியானுதிகளும் செய்து வந்தனர். தன் உ ட ற் ப சி க் கு அன்பர்கள் அன்புடன் அளிக்கும் உணவாதிகளை புசித்துக்கொண்டு ஆத்ம ஞானத்திற்கும், ஆத்மஞான மூலமாக மோக்ஷத்திற்கும் சாதனை செய்து வந்தனர்.

## ஸ்ரீ சுவாமிகள் குருவையடைதல்

ஸ்ரீ சுவாமிகள் மதுரை சென்று திருக்கோவில்களில் இறைவனைத் தெரிசித்து அங்கிருந்து ஸ்ரீ பிரமானந்த ஞானதேசிக சுவாமிகள் மடாலயம் அடைந்தார்கள். அவ்விடம் தன் குரு சோமசுந்தர சுவாமிகளிடம் சாந்தானந்தா என்னும் தீக்ஷா நாமத்தையடைந்து அங்கு உபதேச பாடமாக நடத்தப் பெறுகின்ற நாநாசீவ வாதக் கட்டளை கீதாசாரத் தாலாட்டு, சசிவன்ன போதம், மகாராஜா துறவு, வைராக்கிய தீபம், வைராக்கிய சதகம், இலக்கண விருத்தி, அஞ்ஞவதைப் பரணி, விவேக சூடாமணி, வேதாந்த சூடாமணி, கைவல்லிய நவநீதம், பஞ்சதசி. ஈசுவர கீதை, பகவத் கீதை, பிரம்மகீதை, ஞானவாசிட்டம் என்னும் வேதாந்த ஞான சாஸ்திரங்களையும், இதர இலக்ஷண கிரந்த ஞான சாத்திரங்களையும் ஞான மூர்த்தியாக இருந்து கேட்டு அசேஷ சாத்திர பாண்டித்தியம் அடைந்தார்கள்.

## ஸ்ரீ சுவாமிகள் சீடர்களுக்கு ஞான நூல் போதித்தல்.

ஸ்ரீ சுவாமிகள் மதுரை மடத்திலிருந்து அனுமதி பெற்றுக்கொண்டு புறப்பட்டு இராஜபாளையம் வந்து சேர்ந்து தம்மை நாடி வந்த ஞான விருப்பமுள்ள சீடர்களுக்கு இனிய வேதாந்தத்தை எளிய முறையில் தனது அனுபோக உத்தியுடன் போதனை செய்து வந்தார்கள். சீடர்களாகிய பலரும், பக்தர்களும் சிரவணாதிகள் செய்து வித்தியாநந்தத்தையடைந்து பரவசத்துடன் சுவாமிகளை முக்கரணங்களுடன் போற்றி வந்தனை செய்து வந்தார்கள்.

## ஸ்ரீ சுவாமிகள் விதேக முக்தியடைதல்

சுக்ல ஆண்டு ஆவணி மீ 21-ம் தேதி (6—9—1989) சஷ்டி திதியும் விசாக நக்ஷத்திரமும் கூடிய நன்னாளில் விதேக கைவல்யம் அடைந்து இராஜபாளையத்திலுள்ள சிரஞ்சீவிமலை அடிவாரத்தில கோவில் கொண்டுள்ளார்கள்.



உ
குருவேநம:

# வேதாந்த சூளாமணி

## வினாவிடை

### முகவுரை

ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகளது ஸ்வானுபூதிப் பிரத்தியக்ஷம் பக்குவர்க்கெளிதில் விளங்குமாறு ஏகமே வாத்வைதம் பிரம்மோகம் என்பதைச் சுருக்கமாக விளக்கினர்.

### கணேச வணக்கம்

தருணங் கண்டடியர்க் கருள்புரிபவளாகிய வுமாதேவியின் முகமென்னுந் தாமரைமலர்தற் குதிக்குஞ் சூரியன்போலவடியர் சிந்தையிலுதித்துக் கருணையே மகா மதம்போற்காட்டும் யானைமுகக் கடவுளின் தாமரைமலர் போன்ற பாதங்களை யெமது தலையிற் சூடிக் கொள்ளுவாம்.

அவையடக்கம்—அன்னபக்ஷிபோல் அனுபவிக்க வேண்டும்.

### *சிறப்புப்பாயிரம்*

வேதாந்த சூளாமணி யென்று பெயர் வந்த காரணம் யாது? வேதங்களின் முடியிற் பிரகாசிக்கு மணியாயும், தெய்வசிகாமணியாயும் அடியவர்கள் கண்மணியாயும், மாயையைக் கெடுக்கும் ஞானசூரியனுயும், முக்கண்களையுடைய பரமசிவமணியாயும் விளங்காநின்ற விவேகசிந்தாமணியென்னுநூலின் கணுரைக்கும் வேதாந்தப் பரிச்சேதப் பொருளைத் தமிழாலறிவிக்க.

வேதாந்தமிதுவென்று தெரிவிக்க வந்த வித்தைகளைக் கூறுக? வேதம் 4, அங்கம் 6, நியாயம் 1, மீமாஞ்சை 1, 19 ஸ்மிருதிகள் 1, 18 புராணங்கள் 1, ஆக வித்தைகள் 14.

இப்பதினான்கனுள் '- மீமாஞ்சை யெப்பேர்க்கொத்ததென்பதுமது எத்தனை வகுப்புள்ள தென்பதுங் கூறுக? மீமாஞ்சை யெப்பொருளினுஞ் சிறந்த தாயும், இருபது அத்தியாயமாயும், கன்மம், ஞானமென வர்த்த பேதந்தோன்ற விரண்டுவகுப்புள்ளது.

இந்தக்கன்மம் ஞானமிரண்டினுள் :- கன்மமென்பதென்ன ரூபாமாயாரால் சொல்லப்பட்டது? சூத்திர ரூபமாயும், 12 அத்தியாயமாயும் சைமினி யென்பவராற் சொல்லப்பட்டது.

இம்மீமாஞ்சைக்குப் பெயர் யாது, அது எதைப்பிரதிபாதிக்கின்றது? பூர்வமீமாஞ்சை யென்று பெயர்; அது கன்மத்தைப் பிரதிபாதிக்கின்றது.

பூர்வமீமாஞ்சை யென்ருல் என்னே? உபக்கிரம முதலான ஷட்வித லிங்க தாற்பரியத்தில் வேதவாக்கிய விசாரபூர்வமாக ஜோதிஷ்டோம யாகாதிகள் விதியுக்தமாகச் சொல்லப்படுவது (அதாவது கன்மத்தை மாத்திரம் தெரிவித்தல்).

சைமினி சூத்திரரூபமான பூர்வமீமாஞ்சைக்குப் பாஷியஞ்செய்யப் பட்டது யாரால்? சாபரமென்ற பெயருடையோரால்.

அந்த மீமாஞ்சைக்குப் பாட்டமெனக்கூறுமோர் மதாந்தரம் யாரால் சொல்லப்பட்டது? பாட்டாசாரியனுல்.

பிரபாகரமென்ற மதமானது யாராலுண்டாக்கப்பட்டது?
பாட்டாசாரியனது மாணுக்கனுகிய பிரபாகரனுல்.

மற்ருேர் மீமாஞ்சைக்குப் பெயர் யாது? உத்திரமீமாஞ்சை.

இந்த உத்திரமீமாஞ்சையைச் சூத்திரவடிவஞ்செய்ததார்?
வியாச முனி.

மேற்கூறிய சூத்திரத்தை யெத்தனை அத்தியாயமாக வியாசமுனி செய்தார்? எட்டத்தியாயமாக.

இவற்றுள்:- முதல் நான்கத்தியாயத்திற்கென்னகாண்டமென்று பெயர்? தேவதாகாண்டம்.

தேவதாகாண்டம் யாது பிரயோஜனமுள்ளது? ஆராதிக்கத்தக்கது

பின்னருள்ள நான்கத்தியாயம் யாரால் செய்யப்பட்டது?
பலபத்திரராமனுல்.

இதற்கென்ன காண்டமென்று பெயர்? பிரமகாண்டம்.

இந்தப் பிரமகாண்டம் யாது பிரயோஜனமுள்ளது? விசாரித்துத் தெளிந்து ஞானமடையத்தக்கது.

உத்திர மீமாஞ்சையென்ருல் என்னே? ஞானத்தைத் தெரிவித்தல்.

மேற்கூறிய பிரமகாண்டத்திலென்ன சொல்கிறது? ஜீவேஸ்வர வைக்கியஞ் சொல்கிறது.

பிரமகாண்டத்திற்குப் பாஷியஞ் செய்ததார்? சங்கராசாரியகுரு.

இந்தப் பாஷியத்துக்குப் பெயர் யாது? சங்கரபாஷியம்.

மேற்கூறிய பாஷியத்திற்கு விவரண வியாக்கியானமென்ற பிரபந்தம் யாரால் செய்யப்பட்டது? விவரணுசாரியனென்பவனுல்.

இவ்வேதாந்தசூளாமணி செய்த வாசிரியர் பெருமையுமவர் நாமமுங்கூறுக? நவரசமென்னுந் தேனொழுகுந் தமிழ்க்குரிய சொல்மலர்களாற்றொடுக்கப் பட்ட கவிகளென்னுஞ் சிறந்த மாலையை பரமசிவனுக்கே தரிக்கத்தக்க சிவப்பிரகாசமென்னும் நாமமுடைய கவிஞர்க்கரசன்.

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.

---

## பொதுப்பாயிரம்

எந்நூற்கு முதலிலுரைக்கப்படுவது யாது? மங்களாசரணே.

மங்களாசரணேயென்பதற்கர்த்தம் யாது? மங்களம்-சுபம், ஆசரணே நடத்தை, அதாவது சுபநடத்தை

மங்களாசரணேயென்றுல் என்னே? வாழ்த்து, வஸ்துவணக்கம், நிர்த்தேசம் என மூன்றும்.

இவற்றுள் :- முன்னிரண்டுஞ் சாதாரணமாய் விளங்குதலால் நிர்த்தேசமென்பதற்குப் பொருளென்னே? காட்டல்.

வியாக்கியானங்களினிலக்கணம் யாது? பதம், பதப்பொருள், பதசாரம், வினு, விடை எனவைந்தாம்.

அன்னுவய இலக்கணமென்றுல் என்னே? விசேஷம், விசேஷியம், கர்த்தா, காமம், கிரியை எனவைந்தாம்.

அனுபந்தச்ச துஷ்டயமென்றுல் என்னே? விஷயம், சம்பந்தம், பயன், அதிகாரி என நான்காம்.

அனுபந்தமென்பதற்கர்த்தமென்னே? அனு-உபசர்க்கம், பந்தம்-கூடி நிற்றல் (அதாவது விஷயமுதலிய நான்குங்கூடிநிற்பதென்றுயிற்று).

இவற்றுள்:- விஷயம் யாது? ஜீவேஸ்வரர் ஐக்யம்.

சம்பந்தம் யாது? சிவத்தோடு வேதாந்தநூற்கு வேறுபாடில்லாமற் சொல்லுதல்.

பயன் யாது? துன்பங்களை யொழித்துச் சுகமடைதல்.

அதிகாரி யார்? நான்குசாதனமுடையோன்?

அந்நான்கு சாதனங்கள் யாவை? நித்தியாநித்தியவஸ்துவிவேகம், இகமுத்திரார்த்தபலபோகவிராகம், சமாதிஷட்கசம்பத்தி, முமூட்சுத்துவம் என நான்கு.

இவற்றுள்:- நித்தியாநித்தியவஸ்துவிவேகமென்றுலென்னே? ஆத்மாவே நித்தியம், ஜீவேஸ்வரஜகம்அநித்திய மெனத் தேர்தல்.

இகமுத்திரார்த்தபலபோகவிராகமென்றுலென்னே? இம்மையிலும் மறுமையிலுமுள்ள விஷயபோகமனைத்துமழியுமென்று மவை துன்பங்களுக் கிடமென்று மறிந்து பற்று நீக்கல்.

சமாதிஷட்கசம்பத்தியென்றுல் என்னே? சமம், தமம், திதீக்ஷை, உபரதி, சிரத்தை, சமாதி என ஆறு,

இவற்றுள்:- சமம் யாது? மனமாதியவகக்கரணங்களை யடக்குதல்.

தமம் யாது? ஞானேந்திரிய கர்மேந்திரியங்களை விஷயத்திற் செல்லா தடக்குதல்.

திதீக்ஷை யாது? காமக்குரோதாதிகளை யெழாமலடக்குதல்.

உபரதி யாது? சரியை, கிரியை யோகம் இவைகளைச் சுமையெனக் கண்டு விடுதல்.

சிரத்தை யாது? சுருதியையுங் குருவையுந் துணிவுடனுண்மை யாக நம்புதல்.

சமாதி யாது? குருவினுபதேசத்தை மனதில் சந்தேக விபரீத மின்றிக் கொள்ளுதல்.

குருசேவைக்குள்ளவதிகாரிகளின் நிலைமை யெத்தனை? ஆப்தம், அங்கம், தானம். சற்பாவம் என நான்காம்.

இவற்றுள்;- ஆப்தம் யாது? ஆசிரியரிஷ்டப்படி செய்யுந் தொழில்

அங்கம் யாது? குருபரனது பாத சிஷ்ருஷை செய்தல்.

தானம் யாது? குருபரனுடைய வீடு, நிலம் முதலியவற்றைக் கெடுதல் வராது காத்தல்.

சற்பாவம் யாது? குருவைப் பிரத்தியக்ஷமாகக்கண்ட சிவவடிவ மென்று நம்புதல்.

இனி - காண்டமெத்தனை வகை? கர்மகாண்டம், பக்திகாண்டம், ஞானகாண்டம் என மூன்றும்.

கர்மகாண்டியெனிலென்னை? தன்னுடம்பு, குடும்பம் இவைகளில் யான், எனது என்ற மயக்கமுடையவன்.

பக்திகாண்டியெனிலென்னை? தன் சர்க்கருமத்தினுலுள்ள கிரியை களெல்லாந் தனக்கென்றில்லாம லீஸ்வரார்ப்பணஞ்செய்பவன்.

ஞானகாண்டியெனிலென்னை? யாதொரு கர்மத்திற்குமுடன் படாமல் சாக்ஷி தானுயிருப்பவன்.

மற்றுமொருவர்க்கொருவருயர்வாயடைந்த வதிகாரிகளெத்தனை வகை? கருமி, முமுட்சு, அப்பியாசி, அனுபவி, ஆருடன் எனவைந்துவகை.

கருமி யாவன்? மூடத்தோடு தன் ஜாதிக்குரிய கர்மானுஷ்டானங் களை யனுஷ்டிப்பவன்.

கருமி யெத்தனை பிறப்பில் ஜீவன்முக்தனுவன்? நூறு பிறப்பில்

முமுட்சு யாவன்? பிரபஞ்சமுண்மையென நினைத்துப் புறக்கருமச் சிந்தையுடையவன்.

இவனெத்தனைபிறப்பில் ஜீவன்முக்தனுவன்? மூன்று பிறப்பில்

அப்பியாசி யாவன்? உலகத்தை ஸ்வப்னம்போலெண்ணி யாத்மானுஷ்டானத்திலிருப்பவன்.

இவனெத்தனைபிறப்பில் ஜீவன்முக்தனுவன்? இரண்டு பிறப்பில்.

அனுபவி யாவன்? விவகாரமொன்றையு நினையாமல் தனதெதார்த்த நிலையிலிருப்பவன்.

இவனெத்தனை பிறப்பில் ஜீவன்முக்தனுவன்? ஓர் பிறப்பில்,

ஆருடன் யாவன்? பிரபஞ்சநிலேதோன்ருமல் தன்பால்விளங்கும் ஞானத்தை யுடையவன்.

இவனெத்தனேபிறப்பில் ஜீவன்முக்தனுவன்? அன்றே முக்தன்

மேற்சொல்லியவிதமின்றி வேறுவிதத்தால்முக்தியடையக்கூடுமோ? விவேகம், விரக்தி, தெய்வகதி இவைகளாற்கூடும்.

இவற்றுள்:- விவேகமெனிலென்னே? சோதனே, ஞாயம் பொருத்தம் என்றவிம்மூன்ருல் சந்தேக விபரீதமின்றிச் சுருதி, யுக்தி தெரிந்தவிடத்து ஆசிரியனருட்கண்படத் தனதெதார்த்தம விளங்கல்.

விரக்தியெனிலென்னே? மிகுந்தவிரக்தியாலாசிரியனுபதேசித்த வந்தக்ஷணத்திற் றன்னெதார்த்தம் விளங்கல்.

தெய்வசக்தியெனிலென்னே?
முன்னிலே குருவின்றி யறிவுக்கறிவாய் விளங்கல்.

அப்பியாசிகளாயுள்ளசீடர்பேதங்களா லாசிரியரெத்தனே வகைப் படுவர்? போதககுரு, வேதககுரு நிகிதகுரு, காமியகுரு. சூசககுரு, வாசககுரு காரககுரு, விகிதகுரு எனவெட்டாம்.

இவற்றுள்:- போதககுரு லக்ஷணம் யாது? மகாவாக்கியத்திலுள்ள மேலானவர்த்தங்களேச் சந்தேக விபரீதமின்றிக்கூறுவன்.

வேதககுரு லக்ஷணம் யாது?
உண்மை ஞானத்தை விளக்கிவிப்பவன்.

நிகிதகுரு லக்ஷணம் யாது? வசியத்தாலிகலோகத்திற்கின்பமும் பரலோகத்திற்குத்துன்பமும் கொடுப்பவன்.

காமியகுரு லக்ஷணம் யாது?
இச்சைக்குத்தக்கவாறு போதித்து அருள்பவன்.

சூசககுரு லக்ஷணம் யாது? தனது விவேகத்திஞல் சமை, தமை முதலிய குணங்களே வரச்செய்பவன்.

வாசககுரு லக்ஷணம் யாது? விஷயங்கள் பொய்யெனக்காட்டி யான்மாவிற் பிரியம்வரச் செய்பவன்.

காரககுரு லக்ஷணம் யாது?
கூடஸ்தபிரம்மவைக்யஞான மின்னதென்று தெரிவிப்போன்.

(காரகனென்றேன் பெயர் வந்தது)?
ஐக்கியஞானத்தைக்கொடுப்பவனுதலால்.

விகிதகுரு லக்ஷணம் யாது? முக்தியருள்பவன்.

(விகிதனென்றேன் பெயர்வந்தது)? மிகுந்த இதத்தைச் செய்வதால்

முன்சொல்லிய வன்புள்ள மாணுக்கரிலொருவ னெவ்விதமாகிய துக்கமிகுதியை யடைவன்? தாபத்திரயநெருப்பினுல் வெந்தவனைப்போல் (முத்தாப நெருப்பு)

முத்தாபநெருப்பெனிலென்னை?
ஆதியாத்மீகம், ஆதிதெய்வீகம், ஆதிபௌதீகம்.

இப்பேர்க்கொத்த சீடன் என்ன விசாரணையுட னெதைக்கொண்டு யாரையடைந்து பின்னர் யாதுசெய்து யாதுகேட்டான்? நானுர் இப்பிறவி வந்தவிதம் யாது, எவரானசிப்பது என்று விசாரணையுடையவனுய்த் தனது கையின் மலர்கொண்டு சென்று கல்வி, விவேகம், அடக்கம், வைராக முதலிய குணங்களுடைய சற்குருவையடைந்து, பின்னரவர் சன்னிதியிற் றேகமுழுது நிலத்திற்படுமாறுபணிந்து எழுந்துநின்று தனதன்பினுலிருகரங் களையுங் குவித்து நாவாரத்துதித்து அருட்குருவே யெனது பாசமெங்ஙன மொழியுமெனத் தன்குரு சமீபத்திலிருந்து கேட்கவேண்டியவாறுகேட்டான்

அவ்விதங்கேட்ட சீடனுக்குக் குருவென்னசெய்தெதையுபதேசித் தார்? சீடனது பக்குவமறிந்து அருளால் நோக்கி நீயஞ்சாதேயென்று தனதபயாஸ்தத்தை யவனது சிரசில்வைத்துச் சுருதி, யுக்தியினு லனுத்ம புத்தியை நீக்கித் தாதான்மியவாக்கியத்தாலறியமுடியாத பிரமமேநீயென் றெதார்த்தநிலையைத் தெரிவித்தார். (இது குருவினுபதேசம்)

இதிற்கூறியிருக்குந் தாதான்மியமென்றதற் கர்த்தமென்னை?
அறிவையன்றிச் சீவனுமீஸ்வரனுமில்லையென்று விளக்குவது.

உபதேசத்தின் முறையாவன?

உத்தேசம், இலக்கணம், சோதனை என மூன்ரும்.

இவற்றுள்:- உத்தேசம் யாது, விஷ்ணு, சிவன் முதலிய பெயர் மாத்திரமாச் சொல்லுதல்போல் ஆசிரியர் நீ பிரமமெனச் சொல்லுதல்.

இலக்கணம் யாது? பரவஸ்துக்குள்ள சிறந்தகுறியிதுவென் றுரைத்தல் (20-வது கவியில் இலக்கணத்தைப்பற்றிக் கூறுவதில்

''களகம்பளமாங்குறியுடைய'' என்றதற்கர்த்தமாவது களம்-கண்டம், கம்பளம்-கம்பிளிபோல் தொங்குமலைதாடி ஆதலால் அலைதாடியென்னுங் குறியுடையது பசுவென்றுற்போல)

சோத்னை யாது? லக்ஷியார்த்தமென்னும் பரவஸ்துவில் முக்கிய லக்ஷணங்களுண்டோ இலவோ என்று ஒத்துத்தெளிந்திடுதல்,

அங்ஙனமாயபொருளை யடைதற்குப் பிரமாணங்களெத்தனை? (பிரத்தியக்ஷம், அனுமானம், ஆகமம், உவமானம், அருத்தாபத்தி, அபாவம் சம்பவம், ஐதீகம் என எட்டாம்.

இவற்றுள்:- பிரத்தியக்ஷம் யாது?
சுதரிசனம் (அதாவது கடமுதலியவைகளின் தெரிசனம்)

அனுமானம் யாது?
புகை காரணமாகவக்கினியுண்டெனவுணரும் விவேகம்.

இவ்வனுமானமெத்தனை யுறுப்புகளையுடையது?
பிரதிஞ்ஞை, ஹேது, திஷ்டாந்தம் என மூன்று.

இவற்றுள்:- பிரதிஞ்ஞையென்பதை யுபமானமுபமேயபூர்வமாக விளக்குக? இம்மலை யக்கினியுடைத்தென்றுற்போ லிவ்வுலகமறிவாகிய சித்துடைத்தென்பது.

ஹேது என்பதை யுபமானமுபமேயபூர்வமாக விளக்குக?
புகையிருப்பதினு லக்கினியுண்டென்றுற்போல விஷயானந்தமிருப்பதினு லாத்மானந்த முண்டென்பது.

திஷ்டாந்தமென்பதை யுபமானமுபமேயபூர்வமாக விளக்குக?
மடைப்பளிபோலென்பது (அதாவது அக்கினியைப் பிரத்தியக்ஷமாக்காண்பதுபோல் சித்தைப்பிரத்தியக்ஷமாக்காண்பது)

ஆகமம் யாது? வேதம், அதாவது நதிக்ரையிலுள்ள கனி முதலியவற்றை யுணர்ந்த வுண்மைஞானம்)

உவமானம் யாது? உவமித்தல், அதாவது மரையென்ற மிருகம் பசு வொடொக்குமென்றதைக்கேட்டவன் போகப்போகக் காட்டில் விஷயக் ஞானங் காரணமாகவதன்பாலடைதல்.

அருத்தாபத்தி யாது? அருத்தத்துக்காபத்து நேரிடல், அதாவது பகற்காலத்திலுண்ணுத நித்தியவுபவாசி யிளைக்காது பெருத்திருப்பதைக் கண்டிராக்காலத்திலுண்பானெனக் கற்பித்தல். இது திருஷ்டாருத்தாபத்தி.

திருஷ்டாருத்தாபத்திக்குத் தாஷ்டாந்தம் யாது? விஷயங்களை யனுபவித்தானந்தியாதவன் முகத்தில் பிரமதேஜசு பிரகாசிக்கின்றதைப் பார்த்துள்ளே பிரமானந்தம் பிரத்தியக்ஷமாயடைந்திருக்கிருனெனக் காண்பது.

மற்ருேரருத்தாபத்தியாது? சிரவணுருத்தாபத்தி

சிரவணுருத்தாபத்தி யாது? இங்கிருந்த தேவதத்தனவன் வீட்டிலில்லை யென்ருல் வேருேரிடத்திலிருப்பானெனக் குறிப்பாற்றெரிந்து கொள்ளுதல்.

இதற்குத்தாஷ்டாந்தம் யாது? அறிவினிடத்ததீதானுபவமில்லை யெனிலானந்தத்திலிருக்குமெனல்.

அபாவம் யாது? இன்மை. அதாவது கடாபாவஞானம், கடோபாதி நான்குகாலத்துமில்லை யெனப்பிரதிவாதித்தல்.

சம்பவம் யாது? ஆயிரமென்னுந் தொகையில் நூறென்னுந் தொகை யிருக்கின்றதெனக்கொள்ளு மபேதஞான்ம்போல பிரம்மத்திற் கூடஸ்தனிருக்குமென்னுமிடத்துக் கூடஸ்தனே பிரமம், பிரமமேகூடஸ்தன் எனவபேதம் பிரத்திபக்ஷமாகத் தோன்றுவது.

ஐதிகம் யாது? தொன்றுதொட்டு வழங்கிவருதல், இம்மரத்தில் யக்ஷனிருக்கிருனென்னுஞ் சொல் வழக்கத்தில் வருகின்ற யக்ஷ விஷய ஞானம் ஆதலாலிம்மரமே பேயாய்க் காண்பதுபோலச் சகமே சித்தாய் விளங்குதல்.

மேற்கூறிய பிரமாணங்களைக் கொள்ளுஞ் சமயவான்கள் எத்தனை வகை? உலகாயிதன், சைனன், பவுத்தன், வைபாடிகன், சாங்கியன், தர்க்கன். பிரபாகரன், பாட்டவேதாந்தி. புராணிகர் எனவொன்பதாம்.

உலகாயிதனுக்கெத்தனை பிரமாணம்?

பிரத்தியக்ஷப்பிரமாணம் ஒன்றேயாம்.

சைனன், பவுத்தன், வைபாடிகன் இவர்களுக்கெத்தனை பிரமாணங்கள்? பிரத்தியக்ஷம், அனுமானம் எனவிரண்டாம்.

சாங்கியனுக்கெத்தனை பிரமாணங்கள்?

பிரத்தியக்ஷம், அனுமானம், ஆகமம் என மூன்றும்.

தார்க்கீகனுக்கெத்தனை பிரமானங்கள்?

பிரத்தியக்ஷம், அனுமானம், ஆகமம், உவமை என நான்காம்.

பிரபாகரனுக்கெத்தனை பிரமாணங்கள்? பிரத்தியக்ஷம், அனுமானம், ஆகமம், உவமை, அருத்தாபத்தி எனவைந்தாம்.

பாட்டவேதாந்திக்கெத்தனை பிரமாணங்கள்? பிரத்தியக்ஷம், அனுமானம், ஆகமம், உவமை. அருத்தாபத்தி, அபாவம் எனவாறும்.

புராணிகருக்கெத்தனை பிரமாணங்கள்? பிரத்தியக்ஷாதி எட்டும்.

பொதுப்பாயிர முற்றிற்று.

---

இவற்றுள்,- நான்கு காலம் யாவை? பிராகபாவம், பிரத்தொம்சா பாவம், அன்னியோன்னியா பாவம், அத்தியந்தாபாவம் என நான்கு இவை தமிழில் முன். பின், இடை, ஒருகாலத்தும், எனப்படும்.

பிராகபாவம் யாது? சிருஷ்டிக்கு முன் சத்தைத்தவிரப் பிரபஞ்ச மில்லை யென்பது.

பிரத்தொம்சாபாவம் யாது? லயத்திற்குப்பின் மண்ணைத்தவிரக் கடமில்லாமைபோல லயத்திற்குப்பின் சத்தைத் தவிரப் பிரபஞ்சமின்மை.

அன்னியோன்னியாபாவம் யாது? கடத்திற்படமும், படத்திற்கடமும் இல்லையென்பதினால் மண்ணுநூலுமிருப்பதுபோல, அறிதலில் அறி பொருளும், அறிபொருளில் அறிதலுமில்லாது சத்தாய் விளங்கல்.

அத்தியந்தாபாவம் யாது? மேற்கூறிய மூன்றிடத்து மண்ணைத் தவிரக் கடமில்லாததுபோல எப்போதும் சத்தேபிரத்தியக்ஷம்.



உ

ஸ்ரீ சற்குருவே நம:

# திருக்குவிவேகம்

அறிவு, திருக்கு, அறிபடுபொருள். திரிசியம், இவைகளிலிங்கு திருக்கு என்பதைப்பற்றிச் சொல்வதால் திருக்கு விவேகமென்று கூறினர்.

வேதாந்த சாஸ்திரங்களிற் சொல்லப்படுபொருள்கள் யாவை?
திருக்கு, திரிசியம் என விரண்டாம்.

திருக்குவினின்று தள்ளப்படுவன யாவை?
சுவந்தபேதம், சுசாதிகம், விசாதிகம்.

இவற்றுள்;- சுவகதபேதமெனி லென்னை? சுவ = தன்னிடத்தில் கதம் = நீங்காது பற்றல் எனவே யொன்றிற்றேன்றியதினின்று நீங்காது பலவிதமாய் நிற்பதென்ருயிற்று. அதாவது ஓர் மரத்தினிடத்திலுண்டாகிய மலர், தளிர், இலை, காய், கனி முதலியவை.

சுசாதிகமெனி லென்னை? தன்சாதியென்ருயிற்று. அதாவது மரத்துக்கினமாயுள்ள மரங்கள்.

விசாதிகமெனி லென்னை? வீ= நீக்கம், சாதி= அம்சம், விசாதி யென்ருயிற்று. அதாவது மரங்களுக்கு வேருன கல், மண் முதலியவை.

மேற்கூறிய சுவகதபேதம், சுசாதிகம், விசாதிகம் இவைகள் பிரமத்திற்கின்றென்பதை விளக்குக? பிரமத்திற் சகசீவபரமென்னு மவயவ மில்லாமல் விளங்குவதாற் சுவகதபேதமில்லை. பிரம்மத்தைப்போல வேருேர் பரவஸ்தில்லாததால் சுசாதிகமில்லை சித்திரமெழுதுஞ் சித்திரிகனிடமிருந்து சித்திரசக்தி யெவ்விதமோ வதுபோல மாயை பிரமத்தினின்று வேருகத் தெரியாமையால் நான்குகாலத்துஞ் சச்சிதானந்தமாக விளங்கும் பிரம்மத் திற்கு விசாதிகமில்லை.

ஏகமேவாத்துவிதமென்றமொழி யெந்தவேதத்திலுள்ளது?
யசுர்வேதத்தில்.

ஏகமேவாத்துவிதமென்பதற் கர்த்தமென்னை? முதலாயுள்ள 'ஏகம்' என்னுஞ் சொல்லுக்கைக்கியமும், இடையாயுள்ள 'ஏவ' என்னுஞ் சொல்லுக்குத் தேற்றமும், கடையிலுள்ள 'அத்துவிதம்' என்னுமொழிக் குத்துவிதத்திற்கு மாருகக் கருத்துப்பொருள் வருவதினுல் மாயாகற்பிதங் களைக்கடந்து அவயவமெனலின்றி யென்றுமொருதகைத்தாய் விளங்கும் பிரம்மத்திற்குச் சுவகதபேதம், சுசாதிகம், விசாதிகம் இலவேயில்லை.

பிரமம்சத்து, சித்து, ஆனந்தமாவிளங்கச் சுவகதபேதமின்றென்பதை விளக்குக? சூரியனழகே பிரகாசம்; அப்பிரகாசமே சூரியன் அதுபோலச் சத்தின் தேஜசேசித்து; அத்தேஜசானசித்தேசத்து; சித்துஞ்சத்துங்கூடினதே யானந்தமிது வேறுபாடில்லாதாற், சுவகதபேதமின்று.

சுஜாதிபேதமின்றென்பதை விளக்குக? சத்தைப்போல வேறோர் சத்தென்பதின்றி யச்சத்தே யென்றுமுளதால் சுஜாதிபேதமில்லை.

விஜாதிபேதமின்னென்பதை விளக்குக? சக, சீவ பரம்யாவுஞ் சத்தாய் விளங்குவதால் விஜாதிபேதமில்லை.

மேற்கூறிய பிரம்மத்திலவாந்தரமாகத் தோற்றலை அத்தியாரோப மென்றற்கர்த்த மென்னை? கிளிஞ்சிலிலில்லாத வெள்ளியுள்ளதாக் கற்பித்தல் போலப் பிரமத்திலில்லாத வுலகையுள்ளதாக் கற்பித்தல்.

மேற்கூறிய வாரோபத்தை நிவர்த்திக்கவந்த அபவாதமென்றதை விளக்குக? வெள்ளியல்ல கிளிஞ்சிலேயுள்ளதெனவறிந்தாற்போலச் சுருதி யுக்தியனுபவமாப் பிரம்மமேயுள்ளது சகம் பொய்யெனத்தெளிதல்.

இங்ஙனமெய்யாக விளங்கிய பொருளை வறியத்தக்க விலக்கண மெத்தனை வகை? அதத்துவாவிருத்தி, தடஸ்தம், சொரூபம் என மூன்று

இவற்றுள் :- அதத்துவாவிருத்தியென்றால் என்னை? தூலதேகமுதல் பிரகிருதிவரையுள்ள தத்துவங்களை நியதிசெய்து ஆத்மாவினையதென விளக்குவித்தல்.

தடஸ்தம் யென்றால்என்னை? இவ்விருக்ஷத்தினது கிளையின் உச்சியில் மூன்றும்பிறையுளதென்று காட்டல்போலப் பூதமுதல் ஜகம் வரையுள்ள நிலைகளைக்கொண்டு அறிவுணர்தல்

சொரூபம் யென்றால் என்னை? சூரியன் கிரணவடிவனென்றாற் போல வான்மாவினுண்மைவடிவஞ் சுயம் பிரகாசமாகிய விந்நிலையதென விளக்குவித்தல்.

ஆதலாலுனது சொரூபமும் வடிவமும் யாவை? பிரம்மசொரூபம் வடிவமாவது :- சத்து, சித்து, ஆனந்தம், நித்தியம், பூரணம்.

இவற்றுள் :- சத்துயாது? அறிவு, அறியாமை, சாக்கிரம், சுவப்பனம், சுழுப்தி, மூர்ச்சை, மரண முதலிய அவஸ்தைகளில்லாமல் இருந்தபடியிருக்கின்றதெனல்,

சித்து யாது? எல்லாவவஸ்தைகளிலு நின்றறிதல்

ஆனந்தம் யாது? பிரியத்திற்கு விஷயமாகுந்தன்மை.

நித்தியம் யாது? என்றுஞ் சதோதயமா விளங்குதல்

பூரணம் யாது? ஆகாயம்போல வெல்லாவற்றிலுஞ் சம்பத்தித்துத் தனது நிரந்தரத்தன்மைக்குத் தடையின்றித்தாக்கற்று நிறைவாயிருத்தல்.

உயிராகிய வான்மா சச்சிதானந்த மெனில் எல்லாவுயிர்களிடத்திலு மானந்தம் விளங்காததற்குக் காரணம் யாது? சூடும், பிரகாசமுமுள்ள நெருப்பு விளக்கினிட மொழியதிகரித்திருக்கும், அந்நெருப்பு ஜலத்தினிடஞ் சூடதிகரித்திருக்கும், அந்நெருப்பு விரகினிடமொளியுஞ்குடு மதிகரித் திருக்கும், அவைபோல தாமதவிருத்தியிற் சத்தும், ராஜசவிருத்தியிற் சித்தும் விளங்கும். சாத்விக விருத்தியிற் சச்சிதானந்தம் விளங்கும். ஆகையாலான்மா சச்சிதானந்தமாம்.

சத்து, சித்து ஆனந்தம், நித்தியம், பூரணம் இவைகளில் சத்துக்கு வேறுகத்தோற்றுவனவாகிய போலிசத்து எத்தனை வகை? வியாவகாரிக சத்து, பிராதிபாதிகசத்து, பாரமார்த்திகசத்து என மூன்றும்.

இவற்றுள்:- வியாவகாரிக சத்தென்று லென்னே?
ஐக்கியமுக்திவரை ஜாக்கிரத்திலுள்ள மூவிஷயங்களை மெய் யெனக்கொள்ளல். (வியாவகாரியம் = விவகரிக்கப்படுதல்)

பிராதிபாதிகசத்தென்றுலென்னே? கனவைப்போல பிரதிபலித்து நசிப்பதை மெய்யெனக்கொள்ளல். (பிராதிபாதிகம் = பிரதிபலித்ததாகக் காணல்)

பராமார்த்திகசத் தென்றுலென்னே? விருத்திசம்பந்தப்பட்டவிடத்துங் கெடுதலின்றியுணர்வுமயமாநிற்றல். (பாரமார்த்தம்= விருத்தி சம்பந்தநீங்கி நிற்றல்.)

சித்து எத்தனை வகைப்படும்? சீவன், ஈஸ்வரன், கூடஸ்தன், பிரம்மம் என நான்கு (இவை போலிசித்து)

இந்நான்கையுந் திர்ஷ்டாந்தபூர்வமாக விளக்குக? கடஜலவாகாயம். மேகஜலவாகாயம், கடாகாயம், மேகாகாயம் என நான்கையுமுறையே யெடுத்துக்கொள்ளுக. சலசம்பந்தவாகாயமிரண்டும்போல வந்தக்கரணப் பிரதிபலன சம்பந்த சிதாகாயமிரண்டையுஞ் சீவேஸ்வரரெனவும், சல சம்பந்தமின்றிய சிதாகாய மிரண்டையுங் கூடஸ்தபிரம்மமெனவுங்கொள்க.

இனிமேலானந்த மெத்தனை வகைப்படும்? விஷயம், பிரம்மம், வாசனை, முக்கியம், நிஜம், ஆன்மா, அத்துவிதம், வித்தை என வானந்த மெட்டுவகைப்படும்

இவற்றுள்:- விஷயானந்தமென்றுலென்னை? ஸ்திரி முதலிய விஷயங்களிற் பிரியம்.

ஷை ஆனந்தத்தாற் பிரயோஜனமென்னை? பேரின்பமுதியாதவ பக்குவனுக்கு விஷயானந்தமே பொருளெனக்கூறியது காரணமாகவுண்மை வெளிப்படுத்துநிமித்தம்.

பிரமானந்தமென்றுலென்னை? நித்திரையிலுண்டாகும் பிரியம்.

ஷை ஆனந்தத்தாற் பிரயோஜனமென்னை? பேரின்பமுதியாதவ பக்குவனுக்குச் சுழுப்தியானந்தமே பொருளெனக்கவுணமாகக்கூறியுண்மை வெளிப்படுத்து நிமித்தம்.

வாசனானந்தமென்றுலென்னை?
நித்திரைத் தெளிவிலுண்டாகும் பிரியம்.

ஷை ஆனந்தத்தாற் பிரயோஜனமென்னை?

நித்திரைத் தெளிவிலுண்டாகுமானந்தம வித்தையான் மறைப்பட்டிருக்கின்றதால் சாதனமாகச் சொன்னதேயன்றி யுண்மையில்லை.

முக்கியானந்தமென்றுலென்னை? உபேக்ஷையின் மத்தியிலுண்டாகுமானந்தம்.

ஷை ஆனந்தத்தாற் பிரயோஜனமென்னை? காமக்குரோதாதிகண சித்தவிட்டத்துண்டாயலின்பம் பேரானந்தமெனக் காட்டற்கு.

நிஜானந்தமென்றுலென்னை?
மனோநாசத்திற்கியைந்த யோகாப்பியாசத்திலுண்டாகுமானந்தம்.

ஷை ஆனந்தத்தாற்பிரயோஜனமென்னை? சங்கற்பம் விகற்பங் கரைந்த சுத்தத்திலுண்டாகும் பேரானந்தமிது வெனக்காட்டற்கு.

ஆத்மானந்தமென்றுலென்னை?
எந்த விஷயங்களிலும் யானே யானந்த வடிவனெனத் தோன்றுதல்

அத்துவிதாநந்தமென்றுலென்னை?
உலகம் பொய், சைதன்னியந்தான் என விளங்கல்.

வித்தையானந்தமென்றலென்னே?
மகாவாக்கிய ஞானத்தாலுண்டாகுமின்பம்.

மேற்கூறியவஷ்டவிதானந்தங்கள் யெவ்விதமுண்மைப்பயன்றரும்?
கண்ணடியிற்றேன்றிய பிரதிபிம்பமுகத்தாலுண்மைமுகம் வெளிப்படுவதுபோற் பயனுண்டு.

இவ்வெண்வகையானந்தங்கள் யதார்த்தமோ?
அல்ல. போலியானந்தங்கள்.

நித்தியம்போற்காணப்படும் அபாவமெத்தனை வகைப்படும்?
பிராகபாவம், பிரத்வம்சாபாவம், அன்னியோன்னியா பாவம், அத்யந்தாபாவம் என நித்தியப்போலி நான்கு. (10-வது பேஜ் பார்க்க)

இந்தவபாவங்கள் நித்தியத்தோடு கூடுந்தன்மையுடையதோ? அல்ல

பூரணமென்பது யாது?
ஸ்வரூபமுதல் ஸ்தம்பரியந்த நிறைந்திருப்பது.

இப்பூரணத்திற்கு முரணுயுள்ள பரிச்சேதங்கள் எவை?

காலப்பரிச்சேதம், தேசப்பரிச்சேதம், வஸ்துபரிச்சேதமென மூன்றும்

இவற்றுள்:- காலப்பரிச்சேதமென்றலென்னே?
ஒருகாலத்துண்டு, ஒருகாலத்தில்லை எனல்

தேசப்பரிச்சேதமென்றலென்னே?
ஓரிடத்துண்டு, ஓரிடத்தில்லை எனல்.

வஸ்துபரிச்சேதமென்றலென்னே? ஒன்றுகும், ஒன்றுகாது எனல். அதாவது ஒரு வஸ்துவினுடையதன்மை மற்றெரு வஸ்துவில் இல்லைஎனல்.

மேற்கூறிய மூன்றும் பூரணமாகுமா? ஆகாது. பரிச்சேதங்களே (இவைகளே பூரணப்போலி யெனப்படுவதாம்).

ஆனலிவைகளாற்பயனென்னே? ஒரு வஸ்துவிற்குப் பலவஸ்துக்களும், ஒரு தேசத்திற்குப் பலதேசங்களும், இவைகளுக்கு மேலாகிய காலம் விபுவாதலினுற் பூரணமெனக்காட்டியதற்பின்னரிவை மூன்றும் பரிச்சேதமெனக்காட்டற்கு.

ஜீவபேதங்கள் யாவை? விஸ்வன் தைசதன், பிராக்ஞன் என்பன.

இவற்றுள்'- விஸ்வனுக்குப் பரியாயநாமங்களெத்தனை?

வியவகாரிகன், புத்திகதுவுறுசைதன்யன், சிதாபாசன், விட்சேபரூபன், பிரமாத்திரு, கர்த்திரு, போக்திரு, விஞ்ஞானமயன், குடும்பி, சரீரி. தொம்பதமுக்கியன் எனப் பதினொன்று

இவற்றுள்;- வியவகாரிகனென்றால் என்னை?
எல்லாத்தத்துவங்களோடும் விவகரித்தல்.

புத்திகதுவுறுசைதன்யனென்றால் என்னை?
அந்தக்கரணப்பிரதிபலனன்.

சிதாபாசனென்றால் என்னை? கூடஸ்தசாயை.

விட்சேபரூபனென்றால் என்னை? விஷயமாகப்பரிணமித்தல்.

பிரமாத்திருமென்றால் என்னை? கரணங்களோடுங்கூடியறிதல்.

கர்த்திருவென்றால் என்னை? கர்த்தாவாயிருத்தல்.

போக்திருவென்றால் என்னை? எவற்றையுந் தானனுபவித்தல்.

விஞ்ஞானமயனென்றால் என்னை? எல்லாவற்றையுந்தானறிதல்.

குடும்பி என்றால என்னை? தேகமுதலியவற்றிற் சம்பந்தித்திருத்தல்.

சரீரி என்றால் என்னை? சரீரமேதானென்றிருத்தல்.

தொம்பதமுக்கியனென்றால் என்னை?
நீயென்னும்பதத்திற்கு வாச்சியப்பொருள்.

தைசதனுக்குப்பரியாய நாமங்கள் யாவை?
பிராதிபாதிகன், சொப்பனகற்பிதன் எனவிரண்டாம்.

(தைசதனென்றாலர்த்தமென்னை?) தேஜஸ் சம்பந்தமுடையவன்.

இவற்றுள்:- பிராதிபாதிக சீவனென்றாலென்னை?
சாக்கிரவாசனை பிரதிபலித்தல்.

சொப்பன கற்பிதனென்றாலென்னை? சொப்பனத்தைக் கற்பித்தல்.

பிராஞ்ஞனுக்குப் பரியாய நாமங்கள் யாவை?
அவித்தையோபாதிகன். காரியோபாதிகன் என விரண்டாம்,

அவித்தையோபாதிகனென்றாலென்னை?
அவித்தாசம்மந்தமுடையவன்.

காரியோபாதிகனென்றுலென்னை? அவித்தையினின்று தானே காரியப்படுதற்கு நிற்கும் தன்மையுடையவன்.

மேற்கூறியவை காரணமாக வருகின்ற ஆத்மா வெத்தனை வகைப் படும்? ஜீவான்மா, அந்தரான்மா, பரமான்மா என மூன்று வகை?

இவற்றுள்:- ஜீவாத்மாவென்றுலென்னை?
ஸ்தூலதேக முதலியவற்றோடு கலந்து குடும்பத்திலிருப்பவன்.

அந்தராத்மா வென்றுலென்னை?
தாமரையிலை நீர்போற் குடும்பத்திற்பற்றில்லாதவன்.

பரமாத்மா வென்றுலென்னை?
சூரியன்போற் சாக்ஷியாய் விளங்குபவன்.

ஆன்மாவிற்குப் பிறவித்துன்பமுண்டோ இலையோ வென்பதை யுவமான பூர்வமாக விளக்குக? இல்லை. உண்டெனிற் சூரியன் தடாகத்திற் றடுமாறி விழுந்து தத்தளிக்கிருனென்பதைப்போலும், மேகமோடுவதைப் பார்த்துச் சந்திரனோடுகிருனென்பது போலும்வரும்.

(பிராஞ்ஞனென்றுலர்த்தமென்னை)? பிராக்ஞசம்மந்தமுடையவன். அதாவது சுழுத்தியிலொன்றுந் தோற்றுதிருந்துந் தோற்றற்குக் காரணமா யிருப்பது.

ஆத்மலக்ஷணமென்னை? ஸ்தூலதேக முதலிய மூன்று மான்மாவிற் கில்லை என்று மிருந்தபடியிருக்கிறது.

இனி:-ஈசனதபிமான நாமங்களெத்தனை?
விராட்புருடன். இரண்யகர்ப்பன், அந்தரியாமி என மூன்று.

இவற்றுள்:- விராட்புருடனென்றுலென்னை? சமஷ்டிஸ்தூலதேக வபிமானி அதாவது பிரிதிவு முதலிய வெல்லாந் தன்னுருவாகக்கொள்ளுதல்

விராட்புருடனுக்குப் பரியாயநாமமென்னை? வைஸ்வானரன்.

இரண்யகர்ப்பனென்றுலென்னை? சூக்ஷுமதேக சமஷ்டியபிமானி.

இரண்யகர்ப்பனுக்குப் பரியாயநாமங்களென்னை?
சூத்திரான்மகன், மாப்பிராணன்.

அந்தரியாமியென்றுலென்னை?
காரணசரீர சமஸ்டியபிமானி அதாவது மாயையோடு சம்பந்தித்தல்

அந்தரியாமிக்குப் பரியாயநாமங்களென்னே? அவ்வியக்தன். காரணமாமுபாதிகன், அநந்தமயன், பரதேவதை, பரமன், தற்பதமுக்கியார்த்தன்.

இவற்றுள்:- அவ்வியக்தனென்றலென்னே?
இந்திரியங்களுக்கு விஷயமாகாதடங்கிநிற்றல்

காரணமாமுபாதிகனென்றலென்னே?
ஜெகத்ஜென்மாதி காரணத்வமே யுபாதியாய்நிற்றல்.

அநந்தமயனென்றலென்னே? முடிவில்லாமல் வியாபித்திருத்தல்.

பரதேவதை என்றலென்னே? தேவுக்கெல்லா மகாதேவாயிருத்தல்.

பரமனென்றலென்னே? மேலுக்கெல்லா மேலாயிருத்தல்.

தற்பதமுக்கியார்த்தனென்றலென்னே?
அது வென்னும் பதத்திற்கு வாச்சியார்த்தமாயிருத்தல்.

மேற்கூறிய வீசனுடைய வபிமான நிலைகளை திருஷ்டாந்த பூர்வமாக வடியில் வருமாறு காண்க;-

தவுதபடமென்றலென்னே? வெளுத்தவிடத்துத்தவுதமெனல் சித்திரபடமானது சித்திரமாகவோர் விகாரப்பொருளோடுமின்றித் தனித்து விளங்குமிடம்.

கடிதபடமென்றலென்னே? பசைசூழ்தடவியது

இலாஞ்சனபடமென்றலென்னே?
நீலநிரந்தடவி யுருக்கள்தோன்ற வச்சுக்கட்டினது.

இரஞ்சிதபடமென்றலென்னே? மனம் ரம்மியமாகப் பலவர்ணங் களால் வரிசை வரிசையாச்சித்திரமெழுதப்பட்டது.

மேற்கூறிய படங்களுக்குத் திருஷ்டாந்தமென்னே?
சித்திற்குப்படமும், ஈசனுக்கு வெளுத்தபடமும், அந்தரியாமிக்குக் கடிதபடமும், இரண்யகர்ப்பனுக்கு இலாஞ்சனபடமும், விராட்டுக்கு இரஞ்சிதபடமும். திருஷ்டாந்தம்.

இவ்விடத்திற் சித்திரமென்றலென்னே? பிரமன் முதலிய சித்துப் பொருளும் மலைமுதலிய ஜட வஸ்துக்களுமாகிய வுலகம்.

இனி;- ஈசனது முக்கியமான குணங்களென்னே?

சர்வக்ஞத்வம், அவை கர்த்ருத்வம், அகர்த்ருத்வம், அன்னிதா கர்த்ருத்வம் என்பன.

இவற்றுள்:- கர்த்ருத்வமென்றுலென்னே? இச்சாஞானக்கிரியை யுடையது, அதாவது ஜீவர்கள் மோக்ஷமடையப் போகங்களைக் கொடுத்து அசைப்பித்துக்கொண்டிருக்குஞ் சாமர்த்தியம்.

அகர்த்ருத்வமென்றுலென்னே? இச்சாஞானக்கிரியை நீங்கிநிற்றல். அதாவது ஜீவர்கள் பிரேரிக்கும்படி பிரேரகஞ்செய்து மவற்றிற்பற்றில்லா திருத்தல்.

அன்னிதாகர்த்ருத்வமென்றுலென்னே? ஒன்றையொன்றுக்குவது; கடத்தைப்படமாகச் செய்யுஞ் சாமர்த்தியம்.

மேற்கூறிய பஞ்சகிருத்தியங்கள் யாவை?
சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம், திரோபவம், அனுக்கிரகமென்பன.

எலாமறிதன்முதலனவாம்பிரபுத்வவலியாவன? சர்வக்ஞத்வம், சர்வேஸ்வரத்வம், சர்வநியந்தரத்வம், சர்வாந்திரியாமித்வம், சர்வாத் மகத்துவம், சர்வசக்தியத்வம் முதலியன.

இவற்றுள்:- சர்வக்ஞத்வமென்றுலென்னே?
சர்வாத்மாக்களறிவையறிதல்.

சர்வேஸ்வரத்வமென்றுலென்னே? எவற்றிற்குமேலாயிருத்தல்,

சர்வநியந்தரத்வமென்றுலென்னே?
எவற்றிலுஞ்சமத்துவமாயிருத்தல்.

சர்வாந்திரியாமித்வமென்றுலென்னே?
எவற்றிற்குமுள்ளீடாயிருத்தல்.

சர்வாத்மகத்வமென்றுலென்னே? எல்லாஜீவர்களாயிருத்தல்.

சர்வசக்தியத்வமென்றுலென்னே?
எல்லாச்சக்தியையுந் தன்பாலுடமை.

இனி:- ஈசனது பஞ்சகிருத்தியங்கள் யாவை? சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம், திரோபாவம், (சமனம்) அனுக்கிரகமெனவைந்து.

ஆனால் விகாரமின்றிய பிரம்மமாகியவீசன் பஞ்சகிருத்தியங்கள் எங்ஙனமியற்றுவனென்பனவற்றைத் திஷ்டாந்தபூர்வமாக விளக்குக? இச்சையின்றிய சூரியன்றனது கிரணங்களான் மழைபெய்யச்செய்து, அந்நீரிற்றன் பிரதிபலித்துப் பின்னரச்சாயையைத்தனது மேககிரணத்தான் மறைத்துப்பின்றனது பனிக்கிரணத்தாற்பாதுகாத்து, அதற்பின்றனதுஷ்ண கிரணத்தாலந்நீரைக் கிரகிக்கச்செய்து தன்னோடிரண்டறச் சேர்தல்போல்.

நிமித்தகாரணனென்றாலென்னை? தனது காரணத்தை மறந்த ஜீவர்கட்கு அது வெளிப்படு நிமித்தந் தனுகரணங்களைக்கொடுக்க நோக்கி சிருஷ்டிக்கும் பிரமன்.

உபாதானகாரணனென்றாலென்னை?

மூடமேமுக்கியமாயிருக்குமவசரநிலை = சமயம்.

நியமசக்தியென்றாலென்னை? சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரத்தொழில்,

போக்திருவெனப் பெயர்பெற்ற காரணம் யாது?

புத்தி முதலியவைகளிற்றன் சிவரூபமாகப் பிரதிபலித்துநின்று செய்தல். (பிரதிபலிப்பால் போக்திரு)

சீவர்களுக்கு மீசனுக்கு மெத்தால் பேதம்? வியஷ்டி, சமஷ்டியால்

இவற்றுள்:- வியஷ்டியென்றாலென்னை?

ஒவ்வொரு மரமும் வெவ்வேறு பெயர்கொள்ளல்போ லொவ்வொர் உயிரும் வெவ்வேறு சேதனமாயபிமானித்தல்.

சமஷ்டியென்றாலென்னை? மரக்கூட்டங்களைத் தோப்பென்றது போலுயிர்க்கூட்டங்களை நானென்றபிமானித்தல்.

இனி;- கூடஸ்தநாமங்கள் யாவை?

மூவகையதிஷ்டானன், சேதனன், அந்திரியாமி, அனுசந்தாத்திரு, சுயஞ்சத்தார்த்தன், அவிச்சின்னஜீவன், பாரமார்த்திகன், துரியன், சான்றினன், பிரத்திகான்மா, தொம்பதலக்ஷியார்த்தன் ஆக பதினொரு நாமங்களாம்

இவற்றுள்:- மூவகையதிஷ்டானனென்றாலென்னை?

மூவகை விஸ்வாதிகளுக்குத் திஷ்டானமாயிருத்தல்.

சேதனனென்றாலென்னை? அறிவேவடிவாயிருத்தல்.

அந்தரியாமியென்றாலென்ன? அகத்தில் நிறைவாயிருத்தல்.

அனுசந்தாத்திருவென்றுலென்னே?
இச்சையின்றியெவற்றினுமனுசந்தித்திருத்தல்.

சுயஞ்சத்தார்த்தனென்றுலென்னே? தானே நிஜவடிவாயிருத்தல்.

அவிச்சின்னஜீவனென்றுலென்னே?
கடாகாயம்போல் தேகத்தால் வளைபட்டிருதத்ல்.

பாரமார்த்திகனென்றுலென்னே? யதார்த்தமாக விளங்கல்.

துரியனென்றுலென்னே? சுயஞ்சித்தா விளங்கல்.

சான்றினனென்றுலென்னே? சாக்ஷியாவிளங்கல்.

பிரத்திகான்மாவென்றுலென்னே?
உபாதித்திரயங்களுக்கு விலக்ஷணமாவிளங்கல்.

தொம்பதவிலக்கியார்த்தனென்றுலென்னே?
நீயென்னும் பதத்தின் யதார்த்தப்பொருள்.

இனி;- பிரமத்தின் பரியாயநாமங்கள் யாவை?
மூவகையதிஷ்டானன். பரப்பிரமம், பரதத்துவம், பரமாத்துமா, விசுத்தசித்து, தற்பதலக்ஷியார்த்தன்.

இவற்லுள்:- மூவகையதிஷ்டானனென்றுலென்னே?
விராட்டாதிமூன்றினுக்குமதிஷ்டானமாயிருத்தல்.

பரப்பிரமமென்றுலென்னே? ஒப்பற்ற பிரமம் (மேலான)
பரதத்துவமென்றுலென்னே? மாயாதீதமாயிருத்தல்.

பரமாத்மாவென்றுலென்னே? மாக்ஷிமையுள்ளவாத்மா.

விசுத்தசித்துயென்றுலென்னே? தாரதம்மியமில்லாத பரிசுத்தசித்து.

தற்பதலக்ஷியார்த்தனென்றுலென்னே?
அதுவென்னும் பதத்தினெதார்த்தப்பொருள்.

மேற்கூறிய திருக்கே சீவேஸ்வர ஜெகத்தாப்பரிணமித்ததையுபாதானயுபாதேய பூர்வமாக விளக்குக? கடமுதலிய விகாரங்கள் மண்ணை யன்றியும், ஆபரணங்கள் முதலிய வடிவங்கள் பொன்னையன்றியும் எவ்வித மில்லையோ அதுபோல சீவேஸ்வரஜெகத்து அறிவையன்றியில்லை.

திருக்குவிவேகம் முற்றிற்று.

---

உ

ஸ்ரீ சற்குருவே நம:

# திரிசியவிவேகம்

அறிவாகிய திருக்குவிவேகத்தை முன்னர் கூறியிப்போது அறிபடு பொருளாகிய திரிசியவிவேகங்கூறவாரம்பித்தனர்.

திருக்குவினின்றுந்திரிசியம் வெளிப்படுதற்குக் காரணமாகிய மாயாசக்தியினிலக்ஷணமினையதென வுவமானபூர்வமாகவிளக்குக? பூமியின்சாயையாகிய களங்கஞ் சந்திரனையடைந்ததனை முழுதுமறையாமலந்தச்சந்திரனால் தனது நிலைமையைத் தோற்றுவித்துக்கொள்வது போல மாயாவிகாரமாகிய வறியாமை யறிவினிடமிருந்ததனை மறையாமலவ்வறிவால் தனது நிலைமையினையவென விளக்குவிக்கும்.

ஆத்மாவெங்ஙனமாகாய முதலியகாரியங்களை வேறாகத் தோன்றவொட்டாது தன்னுளடக்கியிருக்கின்றதென்பதை யுவமானபூர்வமாக விளக்குக? அக்கினியினதுஷ்ணத்தை மந்திரசக்தியினால் ஸ்தம்பிக்கச் செய்வதுபோல் ஆத்மாவல்லாமலு மவ்வாத்மாவுக்கு வேறுபொருளாக விளங்காமலு மாகாயமுதலிய காரியங்களை வேறாகத்தோன்றவொட்டாது தன்னுளடக்கிக்கொண்டிருக்கிறது.

அகடிதகடனாசாமார்த்தியமென்றாலென்னை?
கூடாத காரியங்களைக் கூட்டுவிக்கும் வல்லமை.

அதிரிஸ்யமான மாயாசத்தித்திரிஸ்யமாகும்வித மெங்ஙனமென யுவமான பூர்வமாக விளக்குக? சத்தனுடைய சத்தி வித்தை செய்யுங்காற் தெரிவதுபோல் பிரம்மத்தினுடைய மாயாசக்தி வெளிப்படுங்காற்பிரபஞ்சம்.

மாயாசத்தியினிலக்ஷணம் யாவை?
அசத்து, ஜடம், துக்கம், அநித்தம், கண்டம் எனவைந்தாம்.

இவற்றுள்:- அசத்தென்றாலென்னை?
முயற்கொம்பு முதலியவை போல்வன.

ஜடமென்றாலென்னை? கல்முதலியவை போல்வன.

துக்கமென்றாலென்னை? கோரமூடவிருத்திகளின்றன்மை (அதாவது இன்பம்போற்றோற்றியழிதல்)

அநித்தமென்றுலென்னே? நிஜமில்லாத பிராகபாவ முதலியவை (அதாவது இருப்பதுபோற்றேற்றியழிதல்)

கண்டமென்றுலென்னே? காலப்பரிச்சேத முதலியவற்றையேற்பது (அதாவது பின்னமாயிருத்தல்)

மாயையை யனிர்வாச்சியமென்பதற்கர்த்தமென்னே?
ஆம், இல்லே என்று சொல்லமுடியாதது.

மாயைக்கியல்பாயுள்ள வொன்பது குணங்கள் யாவை? பின்னம், அசத்து, சாவயவம். அபின்னம், சத்து, நிரவயவம், பின்னுபின்னம், சதசத்து, சாவயவநிரவயவம் ஆக ஒன்பது.

இவற்றுள்;- பின்னமென்றுலென்னே? ஆத்மதரிசனநிமித்தமனுத் மாவை நியதிகளேயும்போது திரிசியம் வேறுபட்டிருத்தல்.

அசத்தென்றுலென்னே? திரிசியஞ்சமாதியிலின்மை.

சாவயவம் என்றுலென்னே? திரிசியமவயவமாகத் தோற்றல்.

அபின்னம் என்றுலென்னே?
சமாதியின்பின் திரிசியமோருருவாகத் தோற்றல்.

சத்து என்றுலென்னே? சமாதியிற்றிரிசியமறிவாகநிற்றல்

நிரவயவம் என்றுலென்னே? சமாதியிலோருருவமின்மை.

பின்னுபின்னம் என்றுலென்னே? சாதனத்தில் வேறுகவும், சாத்தியத்திலொன்றுகவுமிருத்தல்.

சதசத்து என்றுலென்னே?
திரிசியங்கற்பனேயிற்சத்தும் உண்மையில சத்துமாயிருத்தல்,

சாவயவநிரவயவம் என்றுலென்னே?
சகசத்திற்கண்டேகல்லானதுபோலப் பிரமமேயாவுமாவிளங்கல்.

மாயைக்கியல்பாயுடைய மூன்றுவித சம்பந்தஞானங்கள் யாவை?
சுருதிசம்பந்தம், யுக்திசம்பந்தம். உலோகசம்பந்தம் என மூன்று.

இவற்றுள்:- சுருதி சம்பந்தமென்றுலென்னே? சுருதி சம்பந்தமாக விசாரிக்கிலாகாயபுட்பம்போல வின்மையாதலாற் துச்சமெனல்.

யுக்தி சம்பந்தமென்றுலென்னே? யுக்தி சம்பந்தமாக விசாரிக்கி லிப்பிவெள்ளிபோலுண்டில்லேயென்றுதல் அநிர்வாச்சியமெனல்.

உலகசம்பந்தம் என்றலென்னே? உலக சம்பந்தமாக விசாரிக்கி லாத்மாவைப்போலுள்ளதாகத் தோற்றலால் நித்தியமெனல்.

மாயாபஞ்சசகம் யாவை?
தமம், மாயை. மோகம், அவித்தை, பொய்யுருவி எனவைந்தாம்.

இவற்றுள்:- தமமென்றலென்னே?
ஆன்மாவை யேகதேசத்தின் மறைத்தல்.

மாயையென்றலென்னே?
ஆன்மாவை மறந்தவிடத்துப் பிரபஞ்சமாகக் காணற்கேது,

மோகமென்றலென்னே?
பிரமத்தைப் பிரபஞ்சமாகத் தோற்றுவித்தல்.

அவித்தையென்றலென்னே? தன்னையறியவில்லையென்ற தன்மை யறிவாயிருந்துமதனை யறியாமற்கெடுத்தல்.

பொய்யுருவியென்றலென்னே?
எதார்த்தத்துக்கு வேருகநின்று தனக்கெனவுருவமின்மை.

மாயாதர்மங்கள் யாவை? சங்கோசம், விகாசமெனவிரண்டு.

இவற்றுள் - சங்கோசமென்பதை யுபமானபூர்வமாகக்கூறுக?

படமானது குவிந்தொடுங்கிநிற்கும்போது பலவகைச் சித்திரங்களை யொடுக்கிக்காட்டல்போல மாயையின் சங்கோசதர்மத்தினுல் விரிவாகிய வுலகங்களை யொடுக்கிக்காட்டல்.

விகாசமென்பதை யுவமான பூர்வமாகக் கூறுக? படமானது விரிந்துநிற்கும்போது தன்னிடமடங்கியவநேகவகைச் சித்திரங்களை விளங்கக்காட்டல்போல மாயையின் விகாசதர்மத்தினுல் விரிந்து எல்லா வுலகங்களையுங் காட்டல்.

மாயைக்கியல்பாயுடையவிரண்டு முக்கிய குணங்கள் யாவை?
சுதந்தரத்துவவீனமும், சுதந்தரத்துவமும்.

இவற்றுள்:- சுதந்தரத்துவவீனமென்றலென்னே? தனக்கெனச் சொரூபமின்றிப் பிரமத்தினின்றுந்தானெரு முதலாகி விளங்காமை?

சுதந்தரத்துவம் என்றலென்னே? பிரமத்தைக்கொண்டு சீவர்கள் முதலிய வெல்லாவற்றையுங் கற்பித்தல்.

ஆனுல் மாயை உண்மையோ? ஆகாயபுட்பம் போலில்லை.

மாயையின் விருத்தித்திரயம்யாவை? சுத்தசத்துவவடிவம், மலின சத்துவவடிவம், தமப்பிரதானவடிவம் எனமூன்ரும்.

இவற்றுள்:- சுத்தசத்துவவடிவமென்ருலென்னே? மாயாவிருத்தி,

மலினவடிவமென்ருலென்னே? அவித்தையாவிருத்தி.

தமப்பிரதானவடிவமென்ருலென்னே? விருத்தி,

மாயாப்பிரதிபிம்பசைதன்னியத்திற்கென்னபெயர்?

பிரதிபிம்பித்தசாயைஞானவடிவாகிய பரிசுத்தசைதன்யமேபதியெனவு மிறையெனவும் பெயர். (ஈசனெனவும் பெயர்).

இவற்றுள்:- பதி,இறை,ஈசன் இவர்களுக்குள்ளவித்தியாசமென்னே? கர்த்தாவாயிருத்தலின் பதி, அனைத்தையும் பிரேரகப்படுத்தலின் இறை, தானுதியாகயாவைக்கு மேலாயிருத்தலின் ஈசன்.

ஈசனை மாயை யென்னசெய்யும்? ஈசனுக்கு உபாதிசெய்வித்து அவ்வுபாதி ஈசன் வசப்பட்டிருக்கும்.

அவித்தையென்பது எண்ணிறந்த போக்திரு, பசு, வெனத்தக்க ஜீவர்களை யென்னசெய்யும்? மோகிக்கச்செய்யும்.

மூலப்பிரகிருதியானது பாசமெனச்சொல்லப்பட்டு முக்குணங் களுக்கு மெவ்விதமாய் நின்றது? சமமாக நின்றது.

அவித்தையிற்ருேன்றியவுயிர்களின் போகானுபவநிமித்த முடலுக்கு வேண்டிய காரியங்களெல்லாமுண்டாக வீசனுேக்கினமாத்திரத்தி லெங்கும் பரவியபின்னெதுவானது? பவத்திற்குத் தக்கவாறு காலதத்துவமானது.

இக்காலதத்துவத்தாற்பரிணமித்தது எது? மகதத்துவம்.

இப்பேர்க்கொத்த மகதத்துவமெந்நிலையுடையது? நீர்விட்டவிதையானது முளையாமலும் முன்போலிராமலு மெவ்வித மிருக்குமோவதுபோல் நிலையுடையது.

நடுவவஸ்தையென்பதை விளக்குக? கர்ப்பரூபமாகிய மூலப்பிர கிருதியுமாகாமல் அகங்காரதத்துவமுமாகாமல் கற்பனைஞானமாகிய நிர்விகற்பவடிவம்.

மேற்கூறிய பிரகிருதி, மகதத்துவம், அகங்காரதத்துவம் இவைகளுக்குவமானங்கூறுக? பிரகிருதி= விதை. மகதத்துவம்= ஊறினவிதை, அகங்காரதத்துவம்= அங்குரவிதை.

மகதத்துவத்திற்பேதமாகி அகங்காரத்திலுண்டான மூன்று குணங்கள் யாவை? மகதத்துவத்தில் குணபேதமாகிப் பொய்ஞானத்தினுல் விகற்பவடிவமாகவருகின்ற அத்தியாசமெனச் சொல்லுமுதல் அகங்காரத்தினுலுண்டாகிய குணங்கள் சாத்வித, ராஜச, தாமதம் என்பன.

இவற்றுள்;- சாத்துவிதமுதலிய குணங்களின் வடிவங்கள் யாவை? பிரகாசம், பிரவிர்த்தி, மோகம்.

குணத்திரயங்களின் முறைப்பெயர்கள் யாவை? பிரகாசத்தில் வைகாரியும், பிரவிர்த்தியில் தைசதமும், மோகத்தில் பூதாதியுமாம்.

மகத்துவத்திலுதித்த அகங்காரத்துக்குமதிலுண்டாகிய முக்குணங்களுக்குமுதாரணங்கூறுக? விருக்ஷத்திற்கு அங்குரமுதலாவதுபோல சகத்திற்கு அகங்காரமும், அவ்வங்குரமூன்றிதழானதுபோல் அவ்வகங்கார முக்குணங்களனது.

சாத்விதகுணத்தில் தோன்றுக்குணங்கள் யாவை?
மனம், புத்தி, சித்தம், அகங்காரம், ஆகிய அந்தக்கரணநான்கும்; மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஞானேந்திரியமைந்தும் ஆக தத்துவங்கள் ஒன்பது.

ராஜசகுணத்தில் தோன்றுங் குணங்கள் யாவை?
வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபஸ்தம் ஆகிய கர்மேந்திரியமைந்தும்; பிராணன், அபானன், உதானன், வியானன், சமானன் ஆகிய வாயுக்களைந்தும் ஆக தத்துவங்கள் பத்து.

மேற்கூறிய 19 தத்துவங்களுக்குமென்னதேகமென்று பெயர்?
சூட்சுமதேகம்.

தமோகுணத்தில் தோன்றுங் குணங்கள் யாவை?
விண், காற்று, அக்கினி, அப்பு, மண் ஆகிய பஞ்சபூதம் ஐந்து,

இப்பஞ்சபூதங்கள் பஞ்சீகரித்ததால் என்ன தோன்றியது?
பிரபஞ்சம்.

மேற்கூறிய அந்தக்கரணங்களின் செயல்கள் யாவன?

மனம் நினைக்கவும், புத்தி நிச்சயிக்கவும். சித்தம் சிந்திக்கவும், அகங்காரம் அபிமானிக்கவுமாம்.

இவைகளுக்குத் தேவதைகள் யாவன? மனத்திற்குச் சந்திரன், புத்திக்குப்பிரமன், சித்தத்திற்கு விஷ்ணு, அகங்காரத்திற்கு ருத்திரனுமாம்.

இவைகளுக்கு ஸ்தானங்கள் யாவன? மனத்திற்குக் கண்டம், புத்திக்கு இருதயம், சித்தத்திற்கு நாபி, அகங்காரத்திற்குத்துவக்குமாம்.

பஞ்சீகரித்தலை விவரமாக விளக்குக? பூதங்களை ஒன்றிரண்டாகப் பகுத்து அஃதின் முற்பாதியைந்தை நிறுத்திப் பிற்பாதியைந்தில் ஒவ்வொன்றை நான்காக்கி இவற்றை முற்பாதியில் தன்னம்சம்விட்டு மற்றவைக்கிவ்விருபதையுங்கொடுக்கச் சுயம்பாதியுமற்றப் பாதியுஞ் சேர்ந்து ஒன்றுதல்.

ஞானேந்திரியங்களுக்கு ஸ்தானங்கள் யாவன?
செவி, மெய், கண், வாய், மூக்கு.

ஞானேந்திரியங்களுக்கு தொழில்கள் யாவன?
கேட்டல், பரிசித்தல், பார்த்தல், உண்ணல், முகர்தல்.

ஞானேந்திரியங்களுக்கு அதிதேவதைகளாவன?
திக்கு, காற்று, சூரியன், வருணன், அசுவினி.

ஞானேந்திரியங்கள் புறவிஷயங்கள் யறிவதுபோல் அகத்திலெதை யறியும்? காதுகளை மூடியவிடத்துப் பிராணுதிவாயுக்களின் சப்தங்களைக் கேட்டலும், உண்ணுமிடத்துக் குளிர்வெப்பமறிதலும், கண்களை மூடிய விடத்து இருளைப்பார்த்தலும், ருசியறிதலும், வாசனையறிதலுமாம்.

கன்மேந்திரியங்கட்கு ஸ்தானங்கள் யாவன?
வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபஸ்தம்.

கன்மேந்திரியங்கட்கு அதிதேவதைகள் யாவன?
அக்கினி, தேவேந்திரன், சூரியன், யமன், பிரஜாபதி.

கரணேந்திரியங்களில்:- ஆதியாத்மீகமென்றுலென்னே?
அந்தக்கரணம் 4, இந்திரியங்கள் 10 ஆக 14ம்.

ஆதிபௌதீகமென்றுலென்னே?
ஆதியாத்மீகத்துக்குரிய விஷயங்கள்.

ஆதிதெய்வீகம் என்ருலென்னே?

ஆதியாத்மீகத்துக்குரிய தேவதைகள் 14.

மேலேகூறிய 14 தேவதைகள் விராட்புருஷர்க்கும், இரண்ய கர்ப்பற்கும், அந்தர்யாமிக்கும் என்ன சம்பந்தம்? விராட் புருஷர்க்கு இந்திரியங்களாம், இவ்விந்திரியங்கள் இரண்யகர்ப்பற்குச் சூட்சுமதேகமாம் இச்சூட்சும தேகமே அந்தரியாமிக்குத் தமோரூபமான ஆவரணமாம்.

மேலேகூறிய அதிதேவதை, விராட்புருஷன், இரண்யகர்ப்பன், அந்தரியாமி. இவர்களுக்குப் பெயர்வந்த காரணம் யாது?

இந்திரியங்களால் விஷயங்களையறியச்செய்துவைப்பதால் அதிதேவதை, ஸ்தூலஉலகையறிதற்கிடமாதலால் விராட்புருஷனுக்கு இந்திரியங்கள், விஷயங்களுக்கு இந்திரியங்கள் சூட்சுமமாயிருத்தலால் இரண்யகர்ப்பற்குச் சூட்சுமதேகம் இவைகளொன்றுந் தோன்ருமல் தமசிலடங்கியிருப்பதால் அந்தரியாமி எனவுங்கொள்க.

ஆனுல் ஈஸ்வரனுக்குத் தேகம் யாது? ஸ்தூலாதி மூன்றுதேகமும்.

வாயுக்களறிவதைமுறையே கூறுக?

பிராணனுல் ஸ்பரிசம், வியானனுல் சப்தம், அபானனுல் ரூபம். சமானனுல் ரசம், உதானனுல் கந்தம் இவைகளையறியும்.

ஷை வாயுக்களின் ஸ்தானங்களுந் தொழிலும் விவரமாய்க்கூறுக?

பிராணன் - இதயம், உஸ்வாஸ, நிஸ்வாஸங்களைச் செய்தல், வியானன் - சர்வாங்க வியாபகம், தேகத்தைத் தாங்கிக்கொண்டிருத்தல் அபானன் - குதம், மல ஜல விசர்க்கம் செய்தல். சமானன் - நாபி, உண்ட அன்னரசத்தை அவயவமுழுதும் வியாபிக்கச் செய்தல். உதானன்-கண்டம் அன்னத்தையுள்ளேதள்ளவும் வாந்தியெடுக்கவுஞ் செய்தல்.

மேற்கூறிய வாயுக்களைத் தவிர புறவாயுக்களைக் கூறுக?

நாகன், கூர்மன். கிரிகரன், தேவதத்தன், தனஞ்செயன் எனப் புறவாயுக்களைந்தாம்.

இவற்றுள்:- நாகன்முதலியவைகளைப் புறவாயுக்களெனில் பிராணுதி வாயுக்களை யென்னவென்று சொல்லுகிறது?

அந்தரவாயுக்களென்று சொல்லுகிறது.

நாகன்முதலியவைந்துவாயுக்களின் தொழில்கள் யாவை?

நாகன் சோம்பலுங் கொட்டாவியும், கூர்மன் விக்கலுமேப்பமும், கிரிகரன் தும்மலுமிருமலும், தேவதத்தன் நகைத்தலும் பேசுதலும், தனஞ்செயன் துன்பவின்பங்களுமுண்டாக்கும்.

தனஞ்செயனென்ற மேற்கூறிய வாயுசரீரநீங்கியபின் எப்போது எவ்விதம் நீங்கும்? சரீரநீங்கிய வைந்தாநாளில் கபாலம்வெடித்துச் சரீரத்தினின்று நீங்கும்.

புறவாயுக்களெனக்கூறியது யாது காரணம் பற்றி?
புறம்பிலுள்ள கர்மேந்திரியங்களைச் சேஷ்டிப்பித்தலால்.

அந்தரவாயுக்களெனக்கூறியது யாது காரணம்பற்றி?
இடையிலுள்ள ஞானேந்திரியங்களைச் சேஷ்டிப்பித்தலால்.

வயிரம்பனாதிகளை யகவாயுக்களென கூறியது யாதுகாரணம்பற்றி?
அகத்திலுள்ள அந்தக்கரணங்களைச் சேஷ்டிப்பித்தலால்.

வயிரம்பனாதி வாயுக்கள் யாவன? வயிரம்பன், முக்கியன், பிரபஞ்சனன், அந்தரியாமி, மகாப்பிராணன் எனவைந்தாம்.

ஷை வாயுக்களின் தொழில்கள் யாவன? உள்ளத்தை வயிரம்பனும் மனதை முக்கியனும், புத்தியைப் பிரபஞ்சனனும், சித்தத்தை அந்திரியாமியும் அகங்காரத்தை மகாப்பிராணனும் இயக்குவிக்கும்.

முன்னர்கூறிய மண்ணாதியைம்பூதங்களின் தொழில்கள் யாவன?
பொறுத்தல், பிண்டிகரித்தல், அன்னபானாதிகளைப் பாகமாக்கல், உலர்த்தல், இடங்கொடுத்தலுமாம்.

இவைகளுக்குத் தர்மங்கள் யாவன?
கடினம், நெகிழ்ச்சி, வெப்பம், ஸ்பரிஸம், வெளியுமாம்.

இவைகளுக்கு அதிதேவதைகள் யாவன?
பிரமன், விஷ்ணு, ருத்ரன், மகேசன், சதாசிவனுமாம்.

இவைகளுக்கு குணங்கள் யாவன? விண்ணிற்கு சப்தம் 1, காற்றிற்கு சப்தம், ஸ்பரிசம் ஆக 2, அக்கினிக்கு சப்தம், ஸ்பரிசம், ஒளி ஆக 3, அப்புவிற்கு சப்தம், ஸ்பரிசம், ஒளி, ரசம் ஆக 4, மண்ணிற்கு சப்தம், ஸ்பரிசம், ஒளி, ரசம், கந்தம் ஆக 5.

இனி - திரிபுடிகள் யாவன? ஞாதுரு, ஞான, ஞேயம்.

இவற்றுள்:- ஞாதுருவென்றுலென்னே?
மூலவகங்காரத்தோடு சம்பந்தித்த சீவபோதம்.

ஞானமென்றுலென்னே? அந்தக்கரணப்பிரதிபலனசைதன்யம்.

ஞேயமென்றுலென்னே? பூதபௌதிக விஷயங்கள்.

இனி:- தத்துவங்களிருபத்தொன்பதையுங் கூறுக?
அந்தக்கரணம் 4, ஞானேந்திரியம் 5, கண்மேந்திரியம் 5, பிராணுதிவாயுக்கள் 5, பூதம் 5, மூலவகங்காரம் 1, சிதாபாசசீவன் 1, ஈஸ்வரன் 1, கூடஸ்தன் 1, பிரம்மம் 1 ஆக 29 தத்துவங்கள்.

அநேக நூல்களில் தத்துவங்கள் 36 எனக்கூறியவை யாவன?
மேற்கூறிய 29 தத்துவங்களில் மூல அகங்கார நீங்கி வித்தை அவித்தையுடன் ஷட்கோசதத்துவம் சேர்ந்து 36.

36 தத்துவங்களை இருபத்தொன்பதாக எவ்விதமடக்கியது?
தத்துவங்கள் 36க்கு - அந்தக்கரணம் 4, ஞானேந்திரியம் 5. கர்மேந்திரியம் 5, வாயு 5, பூதம் 5, ஷட்கோசதத்துவம் 6, அவித்தை 1, வித்தை 1, சீவன் 1, ஈஸ்வரன் 1, கூடஸ்தர் 1, பிரமம் 1 ஆக 36. இந்த 36 தத்துவங்களில் மேற்கூறிய ஷட்கோசதத்துவங்களைப் பஞ்சபூதத்தில் அடக்கியும், அவித்தை, வித்தை இரண்டையும் சீவேஸ்வரரிலடக்கியும், மூல அகங்காரம் 1-ம் ஆக 29 தத்துவங்களாயின.

முன்னர் கூறிய சிருஷ்டிகளெத்தனைவிதம்?
கிரமசிருஷ்டி, உகபற்சிருஷ்டி என இருவகையாம்.

இவற்றுள்:- கிரமசிருஷ்டி யாது? மூலப்பிரகிருதியும், அதினின்று விரியப்பெற்ற மகதத்துவமும் அகங்காரதத்துவமும், பஞ்சதன்மாத்திரையும் சத்தப்பிரகிருதியும், தூலபஞ்சபூதமும், இவற்றினின்றுண்டான பிரமாண்டம், பிண்டம் முதலாய உலகத்தோற்றம் (அதாவது பிரகிருதி முதல் உலகத்தோற்றபரியந்த மொன்றின்பின் ஒன்று உதித்தல்)

உகபற்சிருஷ்டியாது? கடலின்கண்காற்றினுலெழும் அலை முதலியவை யெங்ஙனமோ அதுபோல பிரமத்தின்கண் மாயையினுலெழும் நாமரூபப்பிரபஞ்சம் (அதாவது ஒருங்கேயுதித்தல்).

இவ்விருவித சிருஷ்டியும் வேதசம்மதமாகுமோ?
வேதசம்மதமேயாம்.

நிர்விகார பிரம்மத்தினுல் மாயாகாரியங்கள் எவ்விதம் தரப்பட்டது?
சூரியகாந்தக்கல்லில் இச்சாவெத்தனமன்றியுதித்த பூதசூரியனுல் அக்கினியுண்டாவதுபோல்.

இச்சிருஷ்டிகளுக்கு நான்குவித திருஷ்டாந்தங்கள் யாவன?
விருத்தி, பரிணமம், ஆரம்பம், விவர்த்தம் என நான்காம்.

இவற்றுள்:- விருத்தியென்ருலென்னே?
வஸ்திரமே வீடுருவமாதல்.

பரிணமமென்ருலென்னே? பால் தயிராதல்.

ஆரம்பமென்ருலென்னே? நூல் வஸ்திரமாதல்.

விவர்த்தமென்ருலென்னே? பழுதைபாம்பாதல்.



ஆனல் நிர்விகார பிரம்மத்தில் சீவேஸ்வரசகத்துக்கற்பிதமாக உதித்ததற்கு உவமான பூர்வமாகக்கூறி அதற்கு அவைகளால் கலக்கமுண்டோ இலேயோ என்பதைக் காட்டுக?

அறிவுடையோனுக்குத் தன்பாலுண்டான மோகனக் கனவினுல் தனக்குக்கலக்கமில்லாததுபோல ஆத்மாவுக்குத் தன்பாலுதித்த கற்பனுரூபமான ஜீவேஸ்வர ஜெகத்தால் கலக்கமில்லே.

ஈஸ்வரசிருஷ்டி மாறுமோ? மாருது; இருந்தபடியிருக்கும்.

சீவசிருஷ்டிமாறுமோ?
விருப்பு, வெறுப்பு, உபேக்ஷை இவைகளால் மாறும்.

இவற்றுள்;- விருப்பு, வெறுப்பு, உபேக்ஷை முறையே எவைபோல்வன?
பொன், புலி, துரும்பு போல்வன.

மேற்கூறிய மூன்றும் யாருக்குள்ளது? அஞ்ஞானிக்கு விருப்பும், ஞானிக்கு வெறுப்பும், நிஷ்காமியனுக்கு உபேக்ஷையுமாம்.

இன்னும் ஈஸ்வரசிருஷ்டிக்குஞ் சீவசிருஷ்டிக்குந் திருஷ்டாந்தங் கூறுக? ஈஸ்வரசிருஷ்டியால்வந்த ஒரு ஸ்திரியின்தேகம் ஒரே பிரகாரமாயிருக்கச் சீவர்கள் பேதபுத்தியால் அதே ஸ்திரி தந்தைக்கு மகளாயும், நாயகனுக்கு மனேவியாயும், மகனுக்குத் தாயாயும், மாமனுக்கு மருமகளாயுமிருப்பள்.

மேலும்:- ஜீவகற்பிதமெத்தனே வகைப்படும்.
சாஸ்திரப்பிரபஞ்சம், அசாஸ்திரப்பிரபஞ்பம் என இரண்டு.

சாஸ்திரப் பிரபஞ்சம் யாது?

ஜீவேஸ்வரலக்ஷணங்களை விசாரணை செய்தல்.

அசாஸ்திரப்பிரபஞ்சமெத்தனை வகை?

தீவிரப்பிரபஞ்சம், மந்தப்பிரபஞ்சம் என இரண்டு.

இவற்றுள்:- தீவிரப்பிரபஞ்சமென்றுலென்ன?

காமக்குரோதாதிகளில் நிற்பது.

மந்தப்பிரபஞ்சமென்றுலென்ன?

வருணுச்சிரமதர்மங்களுக்குடன்பட்டுச் சங்கற்பிற்கும் மனக்கற்பிதம்.

மேற்கூறிய தீவிரம், மந்தத்தால் ஞானங்கிட்டுமோ?

கிட்டாது; விரோதமே.

சாஸ்திரப்பிரபஞ்சமெதுவரைக்குங் கொள்ளவேண்டும்?

ஆத்மதரிசனம் கிடைக்கும்வரை கொள்ளல் வேண்டும்.

ஜீவர்களுக்கு உபாதி எத்தனை வகை? அவிச்சின்னுேபாதி, பதிவிம்போபாதி, அத்தியாசோபாதி என மூன்றுவகை.

இவற்றுள்:- அவிச்சின்னுேபாதியென்றுலென்னை?

சுழுப்திவடிவமாகநின்ற அவித்தையே ஆவரணமெனப்படுதல்.

பதிவிம்போபாதியென்றுலென்னை? ஆத்மாவானது பிரதிவிம்பித்தல்.

அத்தியாசோபாதியென்றுலென்னை! சுகதுக்கங்களை யனுபவிப்பது போல் ஆத்மாவை விடாது முயற்சித்தல்.

அத்தியாசங்கள் எத்தனை? மித்தையாத்தியாசம், இதராத்தியாசம், இதரேதராத்தியாசம், சத்தியாத்தியாசம், நிருபாதிகாத்தியாசம், சோபாதி காத்தியாசம், தத்தருமாத்தியாசம், சம்மந்தமாத்திராத்தியாசம் என எட்டாம்.

அத்தியாசமென்றுலென்னை? ஒன்றை மற்றொன்றுகப் பாவிப்பது. (அதாவது கிளிஞ்சிலை வெள்ளியெனல்போல்).

இவற்றுள்: முதல் நான்கத்தியாசங்களின் தாத்பரியத்தை விவர மாய்க் கூறுக? அக்கினி சம்பந்தத்தால் ஜலத்துக்குஷ்ணம்வந்ததுபோல் சதோதயமாவிளங்கும் ஆன்மசந்நிதியில் போக்குவரத்தும், காணுதலும். நினைத்தலும், அறிதலுமாம். அதாவது: தூலசரீரமே மித்தியாத்தியாசம், பஞ்சேந்திரியங்களே இதராத்தியாசம், அந்தக்கரணங்களே இதரேதராத்தியாசம், மூல அகங்காரமே சத்தியாத்தியாசம்.

நிருபாதிகாத்தியாசமென்ருலென்னே? ரச்சுசர்ப்பம்போல அகங்கார வான்மாவிற்கு நானெனுந்தன்மைவரல்.

சோபாதிகாத்தியாசமென்ருலென்னே? ஸ்படிகத்திற்பற்றிய சிகப்புப்போல அகங்காரத்தையியல்பாகவுடைய ஆத்மாவிற்கு நான் கர்த்தா என்றுவரல்.

தத்தருமாத்தியாசமென்ருலென்னே? சலத்தில் பிரதிவிம்பித்த சந்திரனைப்போல் அந்தக்கரண ஆத்மாத்விற்கு இச்சாமியமகமென்றிருப்பது

சம்மந்தமாத்திராத்தியாசமென்ருலென்னே? கப்பலிலிருப்போர் விவகாரத்தைப்போல் பூலோகத்தில் பெண்டுபிள்ளை முதலானோர்களிடம் சம்பந்தித்திருப்பது.

இவ்வெட்டத்தியாசங்களால் ஆன்மாவை யென்னவென்று கண்டோம்? நிர்விகாரியெனக் கண்டோம்.

இனி:- ஐந்தவஸ்தைகள் யாவன?
ஜாக்கிரம், சொப்பனம், சுழுப்தி, துரியம், துரியாதீதம் எனவைந்து.

இவற்றுள் - ஜாக்கிராவஸ்தை யாது?
ஸ்தூலபூதம் 5. ஞானேந்திரீயம் 5, கர்மேந்திரியம் 5, வாயு 5, அந்தக்கரணம் 4, ஆக 24 தத்துவங்களுடைய ஸ்தூலதேகத்தில் சாத்வித குணமும், அகாரவெழுத்தும், தெய்வம்விஷ்ணுவும், விஸ்வனுகிய ஜீவனும், விராட்டாகிய சிவனும் ஆகஐந்துக்கூடி நேத்திரமுன்னிலையில் விஷயங்களை இந்திரியங்களால் அனுபவிப்பது.

சொப்பனுவஸ்தை யாது? மனம் 1, அகங்காரம் 1, வாயு 5, ஞானேந்திரியம் 5, கன்மேந்திரியம் 5, ஆக 17கிய சூட்சுமசரீரத்தில் ராஜசகுணமும், உகரவெழுத்தும். தெய்வம்பிரமனும், தைசதனும், இரண்யகர்ப்பனும் ஆக ஐந்துங்கூடி கண்டஸ்தான முன்னிலையில் வாசனு விஷயங்களை மனதினுலனுபவித்தல்.

சுழுப்தியவஸ்தை யாது? மேய்ந்துதிரியுங்குஞ்சுகளைச் சிறகிலடக்கி நித்திரைசெய்யுங் கோழியைப்போல் பிரகிருதிமயமாயுள்ள காரணசரீரத்தில் தமோகுணமும், அகரவெழுத்தும், தெய்வம் ருத்ரனும், பிராக்ஞனும், அந்தரியாமியும் ஆக ஐந்துங்கூடி யிதயமுன்னிலையில் பிரமானந்தம் அனுபவிப்பது.

மேற்கூறிய ஜாக்கிரத்தில் பரியாயநாமங்களாக ஏற்கப்பட்டவைகள் யாவன? மூலவஸ்தை, முத்தருமம், முப்புரம். முத்தானம், முத்தெய்வம்.

இவற்றுள்:- மூவவஸ்தை யாது? சாக்கிரம், சொப்பனம், சுழுப்தி.

முத்தருமம் யாது? அவஸ்தைகள் மூன்று தன்மையாயிருத்தல்.

முப்புரம் யாது? மூன்று தேகமாகிய ஸ்தூலம், சூட்சமம், காரணம்.

முத்தானம் யாது? மூன்றிடமாகிய இருதயம், கண்டம், நேத்திரம்.

முத்தெய்வம் யாது? பிரம்மா, விஷ்ணு, ருத்ரன்.

மேல்:- துரியமென்றுலென்னே? கேவலசுழுப்திநீங்கி மனோ வழக்கந் தவிர்ந்து பிரம்மத்தைத் தியானிப்பது,

துரியாதீதமென்றுலென்னே? பிரம்மத்தில் மனம் லயிப்பது.

இங்ஙனங்கூறியவைந்தவஸ்தைகளுள் விருட்ச முதலியவைகளுக்கு அவஸ்தை யாது? இருளாகிய சுழுப்தியவஸ்தையொன்றே,

விருஷங்களுக்கு அறிவு எத்தனே? ஸ்பரிசம் ஒன்றே.

மிருக முதலியவைகளுக்கு அவஸ்தை யாது?
சுழுப்தியும் கனவுமாம்.

மிருகமுதலியவைகளுக்கு அறிவு எத்தனே? ஸ்பரிசம், ரசம்.

தேவர்களுக்கு அவஸ்தை எத்தனே? சாக்கிரமொன்றே,
(இவர்களுக்குத் தோற்றிய நினேவு மறையாதிருத்தலின் நனவு ஒன்றே.

மனிதர்களுக்கு அவஸ்தை எத்தனே?
சாககிரம், சொப்பனம், சுழுப்தி,

உன்மத்தருக்கு அவஸ்தை எத்தனே? துரியம்.

யோகிகளுக்கு அவஸ்தை எத்தனே? துரியாதீதம்.

இவற்றுள்:- மனிதர்களுக்கு ஜாக்கிராதி மூன்றவஸ்தைசளும் எதற்குச் சாதனமாகும்? பந்தசாதனமாகும்.

பின்னிரண்டுமெதற்குச்சாதனமாகும்? முத்திசாதனமாகும்.

இவ்வைந்தவஸ்தைக ளொன்றினிலொன்றிலாமையால் கால, தேச, வஸ்து இவைகள் நியமம் எதாக முடிந்தது? பொய்யாக முடிந்தது.

மேற்கூறிய பஞ்சாவஸ்தைகளிலு நீங்காமல் நிற்போன் யார்?
கூடஸ்தன் ஒருவனேயாம்.

ஆகையால் ஜாக்கிரத்திலும், சொப்பனத்திலும் அறிவுண்டென்பது உண்மையோ? அறிவுண்டென்பது உண்மை.

ஆனால் ஜாக்கிரத்திலும், சொப்பனத்திலும் அறிவு உண்மையெனப்பெற்றதுபோல சுழுப்தியிலுமுண்டோ? உண்டு; எவ்விதமெனில்;- ஒருவன் தூங்கியெழுந்தபின் சுகமாய்த்தூங்கினேனென்பது நினைப்பு, மனுபவமுஞ்சுழுப்தியின் கண்ணில்லாமல் வராதென்னும் அருத்தாபத்தியினாலும் சகலத்தையுந் தன்பாலடக்கிய இருளைக் கண்கள் காண்பதுபோல் சகலத்தையுந் தன்பாலடக்கிய அவித்தையென்னும் இருளையும், அவ்வவித்தையினது சூக்ஷ்மவிருத்தியில் காற்றினாலலையும் மரத்தினிலைகளினிடையேவந்து தோற்றும் வெண்ணிலாவின் துளிகளைப்போலும் அறிவு உதித்து, விளங்கி, அடங்கும் ஆதலால் மனங்காரணமாக ஆத்மா சுழுப்தியவஸ்தையிலனுபவித்து வருதலால் அறிவுண்டு.

ஒன்றுமறியாமல் சுகமாத்தூங்கினேனென்பதற்குக் காரணம் யாது?
விஷயஞானமின்மையும் குடும்பநிவர்த்தியுமாம்.

சுழுப்தியவஸ்தையில் ஆனந்தமயமா நின்றுள்ள ஆத்மா உண்டெனில் ஒருவராகிலுமறிந்தேனென்று சொல்லாமைக்குக் காரணம் யாது?

தவறிவிழுந்த வொருபொருளை யெடுக்க நீரின் மூழ்கினோன் அவ்விடத்திருக்கின்றதென்பதைக் கரையில் வருமுன் சொல்லக்கூடாமைபோல ஒன்றைச்செய்யவேண்டுமென்னுஞ் சங்கற்பத்தினாலெழுந்திருந்து அதற்குத் துணையாகவுள்ள அந்தக்கரணசம்பந்தத்தினாலன்றி யந்நீரினுள் அறிந்தபொருளைச் சொல்லக்கூடாததாகும்.

ஆகையா லாத்மா என்ன வடிவினையுடையது?
சச்சிதாநந்த சொப்பிரகாசவடிவினையுடையது.

இனி:- கோசங்களெத்தனை? அன்னமயம், பிராணமயம், மனோமயம் விக்ஞானமயம், ஆனந்தமயம் ஆக 5

இவற்றுள்:- அன்னமயகோசமெனிலென்னை?
சுக்கிலசுரோணிதத்தாலாகிய ஸ்தூலசரீரம்.

பிராணமயகோசமெனிலென்னை?
பிராணவாயுவும் கண்மேந்திரியமும் கூடினது.

மனோமயகோசமெனிலென்னை?
மனதும் ஞானேந்திரியமும் கூடினது.

விக்ஞானமயகோசமெனிலென்னை?
அகங்காரமும் ஞானேந்திரியமும் கூடினது.

ஆனந்தமயகோசமெனிலென்னை?
காரண சரீர வடிவாயுள்ள அவித்தையும், விஷயக் காக்ஷியும்' அவற்றோடு சமீபித்தலும், புணர்தலும், தருகின்ற பிரியமும், மோதமும், பிரமோதமும்.

இவற்றுள் - பிரியம், மோதம், பிரமோதம் எனிலென்னை?
பிரியம்= சுகத்தையறிதல், மோதம்= சுகம் சமீபமாயிருத்தல், பிரமோதம்= சுகத்தோடு கூடிநிற்றல்.

துன்பமுண்டாக்கக்கூடிய விஞ்ஞானமய கோசவடிவமாகிய அகங்காரத்தை ஆன்மாவென்று சொல்லுவர் யார்? அறிவில்லாதார்.

அகங்காரமானது கற்பிதமென்று அறிவிக்க ஸ்தூலதேகமுதல் மனமீருயதத்துவங்களையறியும் சக்தி சுயமாயதற்கின்றென்பதை விளக்குக? நீலகுணமாகிய விசேஷத்தோடு புஷ்பமென்னும் விசேஷியமானது விளங்க வெளிப்படுத்துவதுபோல் நானினைத்தேனெனில் (ஸ்தூல தேகத்தோடும்) யான் கேட்பேனெனில் (ஞானேந்திரியத்தோடும்) யோசிப்பேனெனில் (அந்தக்கரணத்தோடும்) மேலாகிய வான்மாவென்போலிருத்தலால் அகங்காரமாம் ஆனதால் அசேதன அகங்காரமானது காந்தக்கல்லின்முன் ஊசிசேஷ்டிப்பதுபோல் விஷயங்களையறியும் சுயமாயறியுந்தன்மையின்று.

அகங்காரமானது விஷயத்திற்சுழன்று சுழுப்தியிலடங்குநிலையெவ்விதம்? சூரியசந்நிதானத்திற்காட்டிய கண்ணாடி சிறுவீட்டை விளக்குவதுபோல ஆத்மாவின் பிரதிவிம்பம் தன்பாலடைந்ததனால் அந்த ஜடவகங்காரம் நனவுகனவுகளில் பலவாறு சுழன்று சுழுப்தியிலடங்கும்.

காமாதிகளை யுண்டாக்கத்தக்க அகங்காரமானது சுழுப்தியிலெவ்விதமிருக்கின்றது? அவித்தையென்னு முட்சுவரும், நித்திரையென்னுங் கதவுமில்லாமலிருக்கின்றது.

நித்திரையினின்று வெளிவருவது எவ்விதம்?
துடர்ந்துவரும் காலகர்மம் முதலிய மகாப்பிராணனால்.

முற்கூறிய அவித்தையிலடுத்திருந்த முதலவித்தையென்னுமகதத்துவமாகிய வாசற்படியில் சேர்ந்திருந்தது யாது?
அகங்காரமென்னும் வெண்பளிக்குக்கல்,

இக்கல்லில் ஆத்மாபிரகாசித்ததாலுண்டானது யாது?
முன்போல ஜீவன்.

சிற்சாயைதோற்றிய வகங்காரம் எவ்வவஸ்தைகளிற் சஞ்சரித்து எப்போதடங்கும்? ஜாக்கிராதி மூன்றவஸ்தைகளிற் சஞ்சரித்து அவற்றி லடங்கும்போது ஆத்மாவிடத்தடங்கி யேகமாவிளங்கும்,

ஆனல் அகங்காரம் ஆத்மாவாகுமா? ஆத்மாவாகாது.

பின்னர் அகங்காரத்தின் சொரூபந்தானென்னை?
சிற்சடசொரூபமாகிய கற்பித ஆத்மா.

சிற்சடசொரூபமென்பதை யுவமானபூர்வமாக விளக்குக?
கண்ணாடியின்முன்பு பிரகாசமும் பின்பு இருட்டும்போல அகங் காரத்திற்கு முன்பு சித்தும், பின்பு ஜடமுமாம். ஆகையால் அகங்காரம் சித்திற்குச்சடமும், சடத்திற்குச் சித்துமாதலால் சிற்சட சொரூபமென்ரு யிற்று.

முன்னர் அகங்காரத்தை ஜடமெனக்கூறிப் பின்னர் சிற்சடரூப மென்று கூறலாமோ; இதையுவமானபூர்வமாகக் கூறுக?
ஜடரூபமாயிருந்த கண்ணாடி சூரியப்பிரகாசத்தைக்கிரகித்துஇருளை நீக்குந்தன்மைபோல, விவகாரம் ஜடமாயினும் கூடஸ்தனது பிரகாசத்தைக் கிரகித்து விஷயங்களை விளக்கும்.

மேற்கூறிய முதலவித்தை மகதத்துவமெனில் இதற்குக் காரண அவித்தை யாது? மூலப்பிரகிருதி.

மேற்கூறிய வகங்காரத்திற்குவரும் சம்பந்தங்களாகிய தாதாத்மியத் திரயம் யாவன? கன்மம், சகஜம், பிராந்தி என மூன்று,

இவற்றுள்:- கன்மஜதாதாத்மியமென்ருலென்னை?
அகங்காரம் ஸ்தூல சம்பந்தத்தினுல் சீதோஷ்ணுதி சுகதுக்கங்களை யறிதல்.

சகஜதாதாத்மியமென்ருலென்னை?
அகங்காரமானது சீவனுடன்கூடி நானறிந்தேனென்பது இயல்பா யிருத்தல்.

பிராந்திஜ தாதாத்மியமென்ருலென்னை?
அகங்கார சம்பந்தத்தினுல் நான் கருத்தாவென்றறிவது (பிரமை).

இத்தாதாத்மியங்கள் மூன்றுமெதை விளக்கியது?
இவ்வகங்காரம் ஆத்மாவன்றென விளக்கியது।

இனி:- ஆத்மாவில் தோற்றின அவஸ்தைகள் யாவன?
அஞ்ஞானம், ஆவரணம், விக்ஷேபம், பரோக்ஷஞானம். அபரோக்ஷ ஞானம், துக்கநிவர்த்தி, தடையற்றவானந்தம் ஆக 7.

இவற்றுள்:- அஞ்ஞானமென்றாலென்னே?
தன்னெதார்த்த நிலையையறியாதிருப்பது.

ஆவரணமென்றாலென்னே? ஒருவர் ஆத்மலெக்ஷணங் கூறுமிடத்து அஃதில்லையென்றும், அஃதுண்டெனில் தோன்றாதாவென்னுமயக்கம்.

விக்ஷேபமென்றாலென்னே? கர்த்தாவும், கருமபலத்தையனுபவிக்கும் போக்தாவும் தானெனவே நினைத்து ஸ்தூலவுடம்பை யபிமானிக்குஞ்சீவன்.

பரோக்ஷஞானமென்றாலென்னே?
பிரபலசுருதியாலும், சற்குருவினாலும் ஆத்மாவுண்டெனவறிதல், (இதில் அசத்தாவரண நிக்ரகமாகத்தக்கது)

அபரோக்ஷஞானமென்றாலென்னே? நானேபிரமமென அனுபவித்தல் (இதில் அபாவாவரண நிக்ரகமாகத்தக்கது).

ஆனதால் மேற்கூறியவிரண்டுஞானத்தால் என்ன நீங்கிற்று?
பரோக்ஷ ஞானத்தால் நாஸ்தியாகிய அசத்தாவரணமும், அபரோக்ஷ ஞானத்தால் நபாதியாகிய அபாவாவரணமும் நீங்கிற்று.

துக்கநிவர்த்தியென்றாலென்னே? ஆத்மசாக்ஷாத்காரத்தையடைந்து அதன்பின் நான் கர்த்திரு, போக்திரு எனச்சொல்லுஞ் சிதாபாசவடிவமான துக்கநீங்கல்.

தடையற்றவானந்தமென்றாலென்னே?
அடையவேண்டிய பலனனைத்துமடைந்து அமைதிபெறல்.

இவ்வேழவஸ்தைகளுக்குமுவமானமாவது - அஞ்ஞானம்? பத்துப் பேர் பிரவாகமான நதியைக்கடந்து அக்கரையிலவர்களிலொருவன் தன்னை நீக்கியொன்பதுபேரையெண்ணி பத்தாமவனைக்காணமல்மரம்போல்நிற்றல்.

ஆவரணம்? பத்தாமவனில்லையென்னு நாஸ்திகமும், இருந்தால் காணப்படானோவென்னு நபாதிகமுமாகியவிரண்டு மயக்கமும்.

விக்ஷேபம்? நதியிலிறந்துவிட்டானென்ற துக்கம்.

பரோக்ஷம்? வழிப்போக்கன் வசனத்தால் பத்தாவானுயிரோடிருக்கிருனென்றறிதல்.

அபரோக்ஷம்? ஒன்பது புருடரையெண்ணிப் பின்னர் நீயே பத்தாவான் எனக்காண்பிவிக்க அவன் தன்னைத்தானே யிருந்தபடியிருந்தறிதல்.

துக்கநிவர்த்தி?

பத்தாவானிறந்தானென்றகாரணமாகவந்த துக்கம்போதல்.

தடையற்றவானந்தம்? தனதெதார்த்தநிலையில் ஆனந்தித்திருத்தல்.

இதில் பத்தாவானென்பதற்கும் வழிப்போக்கனென்பதற்கும் உட்கருத்தென்னை? பத்தாவான் என்பது ஆத்மா, வழிப்போக்கன் என்பது குரு

இனி:- ஆத்மநிச்சயத்தை யபரோக்ஷமாக்கவந்த வேதவாக்கியங்கள் யாவன? விதி, நிஷேதம், சித்தார்த்தபோதகம் என மூன்று.

இவற்றுள்:- விதிவாக்கியமென்றுலென்னை?

யாக முதலியவைகளைச் செய்தல்.

நிஷேதவாக்கியமென்றுலென்னை?

மதுமாமிச முதலிய உணவை விடல்,

சித்தார்த்தபோதகமென்றுலென்னை?

திரிசியவிருப்பின்றி விதிகடந்து கூடஸ்தபிரம்ம ஐக்யப்பொருளை மயங்காமல் தெளிவித்தல்.

ஷை வாக்கியங்கள் எங்குள்ளன? நான்கு வேதங்களிலுள்ளன.

நான்குவேதங்களிலு மெது சிறப்புற்றது? சாமவேதம்.

சாமவேத மகாவாக்கியம் யாது? தத்வமசி.

தத்வமசிமகாவாக்கியம் எத்தனை பதங்களை யடக்கிக்கொண்டிருக்கிறது? தற்பதம், தொம்பதம், அசிபதம் என மூன்று.

இப்பதங்கட்கு அருத்தமென்னை?

பிரம்மமும், கூடஸ்தனும் இவ்விரண்டினைக்கியமுமாகிய மூன்றும்.

இனி:- பதம், பதார்த்தம், வாக்கியார்த்தம் இம்மூன்றுக்குஞ் சம்மந்தமெத்தனை வகை? சாமானுதிகரணம், விசேடவிசேடியம் இலக்கணவிலக்கியம் எனச்சம்பந்தமூன்று.

இவற்றுள்:- சாமானுதிகரணசம்பந்த மென்பதென்னே?

தத்தொமென்ற துவிதபத சம்பந்தமாயிருத்தல் சாமானம், இவ்விரண்டுமசிபதமாயிருத்தல் அ தி க ர ண ம், இம்மூன்றுமொன்ருச் சம்மந்தித்திருத்தல் சம்பந்தமுமாம்.

இலக்கணவிலக்கியமென்பதென்னே?

இம்மூன்று பொருளுமேகமாயிருத்தல் இலக்கணமும், ஏகமென்பதின்றிச்சுயமாய் விளங்குவது இலக்கியமும், ஏகமென்றுஞ் சுயமென்றும் பிரிவின்றிச்சம்பந்திப்பது சம்பந்தமுமாம்.

முற்கூறிய பதப்பொருளிரண்டிற்குமிரண்டர்த்தங்கள் யாவன?

வாச்சியார்த்தம், லக்ஷியார்த்தம் எனவிரண்டு.

அவ்விரண்டு பதார்த்தங்களினுருவங்களாவன? விராட், இரண்ய கர்ப்பன், அந்தரியாமி இம்மூன்றுருவாகிய ஈசனும், பிரமமும்.

தற்பதத்திற்குள்ள பெயர்கள் யாவன?

வாச்சியார்த்தம், முக்கியார்த்தம், அபிதார்த்தம் என மூன்று.

மேற்கூறியதுபோல் தொம்பதார்த்தங்களினுருவங்கள் யாவன?

விஸ்வன், தைசதன், பிராக்ஞனுகிய ஜீவனும் கூடஸ்தனும்.

த்வம்பதத்திற்குள்ள பெயர்கள் யாவன?

வாச்சியார்த்தம், முக்கியார்த்தம், அபிதார்த்தம் என மூன்று.

இவற்றுள்;- வாச்சியார்த்தமென்ருலென்னே? வாசகப் பொருள்.

முக்கியார்த்தமென்ருலென்னே?

இவ்வாசகப் பொருளின் குணத்தினி லக்ஷணப்பொருள்.

அபிதார்த்தமென்ருலென்னே?

இவ்விலக்ஷணப்பொருளே விராட்டாதி நாமமாகத் தோற்றல்.

முற்கூறிய தற்பதார்த்தத்திற்கு லக்ஷியார்த்தம் யாது? பிரம்மம்

தொம்பதார்த்தத்திற்கு லக்ஷியார்த்தம் யாது? கூடஸ்தன்.

லக்ஷியார்த்தமென்ரு லர்த்தமென்னே?

லக்ஷணையாலறியு முண்மைப் பொருள். அதாவது விராட்டாதி நான்குபாதியுநீங்கிய பிரம்மத்தையும், விசுவாதி நான்குபாதியுநீங்கிய கூடஸ்தனையும் பிரத்தியக்ஷமாத் தரிசிப்பது.

லக்ஷணை யெத்தனை வகை? விட்டலக்ஷணை, விடாதலக்ஷணை, விட்டும் விடாதலக்ஷணை யென மூன்றும்.

இவற்றுள் - விட்டலக்ஷணையென்றுலென்னை?
தேகாதி தன்மைகளைவிட்டு ஜீவனைலக்ஷியப்பது.

விட்டலக்ஷணைக்குதாரணங்கூறுக? கங்கையின்கண் இடைச்சேரி யென்பதில் முக்கியார்த்தமாகிய இடைச்சேரியைவிட்டுக் கரையைக் காட்டும்.

விடாதலக்ஷணையெனிலென்னை?
சர்வதத்துவாதி தன்மைகளை விடாமல் ஈசனை லக்ஷியப்பது.

விடாதலக்ஷணைக் குதாரணங்கூறுக? குந்தமென்றசொல் தன் முக்கியார்த்தத்தை விடாமல் தன்னைச் சுமப்பவனாகிய குந்ததாரியைக் காட்டும்.

விட்டுவிடாதலக்ஷணையெனி லென்னை?
பிரம்மகூடஸ்தரை விட்டும் விடாமல் அத்துவிதத்தை லக்ஷியப்பது.

விட்டுவிடாதலக்ஷணைக்குதாரணங்கூறுக?
சோயம் தேவதத்தனென்பதில்:- சோ = அவனென்ற சொல் இறந்தகாலத்தில் வருகின்ற தேசமும், வயதிலதிகமாகிய புருஷனைக் காட்டும். அயம் = இவன் என்றசொல் நிகழ்காலத்தில் வருகின்ற அந்தத் தேசத்தையும் அந்தவயதையுமுடைய புருஷனைக் காட்டும். இப்பேதங்களைவிட்டுப் புருஷனைவிடாதுபற்றில் அவனே இவன், இவனே அவன் எனவைக்கியங்கூடும், இதற்கு வாச்சியார்த்தமாவது:- சோ = அவனாகிய ஈசன், அயம் = நீயாகிய ஜீவன்,

விட்டுவிடாதலக்ஷணைக்குப் பரியாய நாமங்கள் யாவன?
அருத்தலக்ஷணை, பாகத்தியாகலக்ஷணை.

இவற்றுள்:- அருத்தலக்ஷணையெனி லென்னை?
பொருளை மாத்திரங்காட்டடல்.

பாகத்தியாக லக்ஷணையெனிலென்னை?
விருத்ததர்மமாகிய பாகுபாடை நீக்கல்.

மேற்கூறிய உதாரணங்கள் தத்வமசிவாக்கியத்திற்குமேற்குமோ?
ஏற்குமெனச் சத்துக்கள் கூறுவர்,

இனி;- தத்பதவாச்சியார்த்தமெனிலென்னை?

சர்வஞ்ஞத்வமுதலிய ஆறுகுணங்களையு மியல்பாகவுடைய பரோக்ஷமாகிய சிவனையுணர்த்தல்.

தொம்பதவாச்சியார்த்தமெனிலென்னை?

கிஞ்சிஞ்ஞத்வ முதலிய ஈனகுணங்களுடைய அபரோக்ஷகற்பித ஆத்மாவாகிய சீவனையுணர்த்தல்.

மேற்கூறிய சிவசீவர்களுக்கு ஐக்யங்கூடுமோ? கூடாது,

முன்னர்கூறிய லக்ஷியார்த்த கூடஸ்பிரம்மத்துக்குஐக்யம்கூடுமோ? கூடும்.

கற்பனையாகத் தோன்றியதுநீங்கியுள்ளது விளங்குகின்றதென்பதை யுவமானபூருவமாக விளக்குக?

கடமுதலிய உபாதிகளை யொழித்து ஆகாயம் ஒன்றேயெனவும், இராமனைப்பார்த்து நீயே விஷ்ணுவெனவும், கர்னமகாராஜனைப் பார்த்து அவன் வேடுவத்தன்மையைநீக்கிக் குந்திமாதேவி புத்திரன் நீயேயெனவும், தசமனை நோக்கித் துன்பமொழித்து நீயே பத்தாவானெனவும், தெரிவிப்பதெங்ஙனமோ அதுபோல சுயஞ்சைதன்னியத்தில் சீவேஸ்வரபேத நீக்கில் சுயமாகவே யாவுந்தன்மயமாய் விளங்கும்.

இனி-- ஏகாதசவாதம் யாவன? அருத்தவாதம், உபாசனுபரவாதம், துதிபரவாதம், உபசாரிநவாதம், சகுணசாதிரிசவாதம், சாதிவியத்திவாதம், காரியகாரணவாதம், குணகுணிவாதம், விகாரவாதம் அம்சாம்சிகவாதம், விம்பப்பிரதிவிம்பவாதம் எனப் பதினொன்று.

இவற்றுள்:- அருத்துவாதமெனில் என்னை?

அன்போடர்ச்சிக்கும் ஒருபுஷ்பார்ச்சனைக்குச் சுவர்க்கம் கிடைக்குமென்ற கர்மகாண்ட வசனம்போல் நிராசையால் முக்திவிருப்பம் வாய்க்குமெனல்.

உபாசனுபரவாதமெனி லென்னை?

விசித்திரமாகச் செய்த விக்கிரகத்தைத் தேவதையாகப் பாவிப்பதுபோல், எதிரிட்டவஸ்துக்களைத் தனதுருவமாகச் சிந்தித்தலின் அச்சிந்தனையாலடையலாமெனல்

துதிபரவாதமெனிலென்னை?

ஒரு மனிதனைத் த ன க் கு ப் பயன்வேண்டித் தேவேந்திரனாகத் துதித்தல்போல் சீவனைச் சிவமாகத் துதித்தல்.

உபசாரிகவாதமெனிலென்னை?

அடிமையை யரசெனக்கூறுவதுபோல அடியார்களாகிய ஜீவர்கள் அடிகளாகிய சிவமாக உபசரித்துக்கூறுதலால் அடையலாமெனல்.

சகுணசாதிரிசவாதமெனிலென்னை? இப்பிரமசாரி நெருப்பெனக் கூறுமுலகவசனம்போல் சிவத்தின் குணத்தைச் சீவனிடத்திற்காண்பித்தத லடையலாமெனல். (சகுணம்= சமானகுணம், சாதிரிசம்= ஒப்பு எனவே ஒன்றின் குணத்தை மற்றொன்றாக ரூபகப்படுத்துதல்).

சாதிவியத்திவாதமெனிலென்னை? இத்தேகம் அலைதாடி முதலிய பசுவினுடம்பெனக் கூறுவதுபோல் சீவேஸ்வரஜகம் சிவவடிவமென லாலடையலாம். (சாதி= வேற்றுமை, வியத்தி= ஒற்றுமை).

காரியகாரணவாதமெனிலென்னை?

கடத்துடன் மண்ணிற்கேகத்துவம் வாய்க்குமெனல்போல ஆதார ஆதேயரகிதமான வஸ்துவிற்கு அவை யமைத்துக்கூறுதல்.

குணகுணிவாதமெனிலென்னை?

நீலோற்பலமென்னும் வாக்கியத்தைப்போல் பண்புரகிதமான வஸ்துவிற்கு அவையமைத்துக்கூறுதல்'

விகாரவாதமெனிலென்னை?

தயிரும்பாலும் அபேதமெனல்போல் அவிருத்தவிருத்தாகித வஸ்து விற்கு அவையமைத்துக்கூறுதல்.

அம்சாம்சிகவாதமெனி லென்னை?

ஜலம் அலையாதிகட்கு ஏகத்துவம் வாய்க்குமெனல்போல ஒன்றே பலவுமாகாத வஸ்துவிற்கு அவையமைத்துக்கூறுதல்,

பிம்பப்பிரதிபிம்பவாதமெனி லென்னை?

பிம்பப்பிரதிபிம்பங்களுக்கு ஏகத்துவம் வாய்க்குமெனல்போல ஒன்றில் கூடி மற்றொன்றாகாதவஸ்துவிற்கு அவையமைத்துக்கூறுதல்,

மேற்கூறிய 11 வாதமும் சுருதி சம்மதமோ? இன்று.

எவ்விதமின்று? அபேதமாகக் கூறப்படுவனவெல்லாம் சுருதிக்கு விரோதம். அதாவது உண்மைக்கும் உண்மைக்கும் ஏகத்துவமேயன்றி உண்மைக்குங் கற்பனைக்கும் ஏகத்துவமின்மையால் சுருதி விரோதம்,

சுருதி விரோதமானால் அபேதமாகக் கூறுவானேன்?

சாதனமாகக் கற்பித்துக் கூறினதேயன்றி உண்மையின்று.

கற்பித்துக்கூறுதலா லாயபயன் என்னே?

பலகற்றேட்ட ரத்னம் வாய்த்ததுபோல் வாய்க்கும்.

பிரபலசுருதி விசாரணையினுல் எவ்வித முக்தியுண்டாகும்?

சொற்பன ஸ்திரியைக் கூடுவதினுல் இந்திரியம் வெளியாவதும், விக்கிரகங்களைக் கடவுளாகப்பாவித்து வந்தனைவழிபாட்டினுல் அவரவர் இச்சைப்படி நிறைவேறிப்பலப்பிராப்தியுண்டாவதுபோல் சுருதிவிசாரத்தால் முக்கியுண்டாகும்.

முக்திக்கு விரோதமாயுள்ள அஞ்ஞானம், சந்தேகம், விபரீதம் இவைகளின் தன்மையாவன?

அஞ்ஞானமாவது:- யான் பிரம்மசொரூபமின்றெனல்.

சந்தேகமாவது:- யான் பிரமமோ அலனோவெனல்,

விபரீதமாவது;- யான் பிரமமென்ருலும் தொன்றுதொட்டுவரும் ஜீவனுண்டெனல்.

ஆனுல் மேற்கூறியமூன்றையு நீக்குமார்க்கமென்னே?

சிரவண, மனன, நிதித்தியாசனங்களால்.

இவற்றுள் - சிரவண, மனன, நிதித்தியாசனங்களான் முறையே யாது நீங்கும்? சிரவணத்தால் அஞ்ஞானமும், மனனத்தால் சந்தேகமும், நிதித்தியாசனத்தால் விபரீதமும் நீங்கும்.

மேற்கூறிய சிரவணமெனிலென்னே?

கர்மகாண்ட விசாரத்தால் திடத்தியானத்தெளிவுவரல்போல் ஜீவேஸ்வரவைக்கியத்தைப் பிரதிவாதிக்கும் பிரபலசுருதியின் தாற்பரியத்தைக் கேட்டல்.

மேற்கூறிய மனனமெனிலென்னே?

கேட்டபொருளை யுக்தியால் யோசித்தல்.

மேற்கூறிய நித்தியாசனமெனிலென்னே?

மேலிரண்டினுல் துணிவுகொண்டபொருளை மனதில் அசைவரக் கொள்ளுதல்.

மேற்கூறிய மூன்றிற்கு முவமானங்கூறுக?

சிரவணம்= அங்கி, மனன, நிதித்தியாசனம்= அங்கம், அதாவது சிரவணத்தின் துணை.

எவ்விதமங்கமென உவமானபூர்வமாகக்கூறுக?

இருளிலினுல் மறைபட்ட பொருளை தீபம் தோற்றுவித்தாலும், அத்தீபம் காற்ருலலையுங்கால் அக்காற்றைநிறுத்தத் தீபத்திற்குச் சக்தியின்மையால், அத்தீபத்தை யலையச்செய்யும் காற்றைத் தடுக்கும் திரைபோல் மனனம். அத்தீபத்திலுள்ள திரியைத் தூண்டுவதால் பிரகாசம் உண்டாவதுபோல் நிதித்தியாசனம்.

சிரவணத்திற்குண்டான சடுவிதலிங்கமிளையவெனக் கூறுக?

உபக்கிரமம் உபசம்ஹாரம் 1, அப்பியாசம் 2, அபூர்வதை 3. பலம் 4, அர்த்தவாதம் 5, உற்பத்தி 6 யென்பனவாம்.

இவற்றுள்;- உபக்கிரமமென்ருலென்னை?

சிருஷ்டிக்குமுன் உலகம் பிரம்ம சொரூபமாயிருந்த தென்றும், அப்பிரமத்திற்குச்சுவகதாதிமூன்றுமிலையென்றும்,பூரணத்துவம் சாதிப்பது-(அதாவது சிருஷ்டிக்குமுன் பின் எப்போதும் சத்தாகத்தோன்றுவது).

உபசம்ஹாரமென்ருலென்னை?

உலகத்தைப் பிரமத்திற்கரைத்துப் பிறவிநீங்குமாறு கூடஸ்த பிரம்மவைக்கியங்கூறி அத்துவிதஞ்சாதிப்பது (அதாவது சத்தினம்சமாக ஜெகஜீவபரங்களைக்கரைப்பது),

அப்பியாசமென்ருலென்னை?

கூடஸ்தனே பிரம்மமென்று மீண்டுமீண்டுந்தெளிய வுணர்த்துவது. அதாவது சாமவேதத்தில் பிரத்திகான்மாவே பிரம்மமென ஒன்பது தடவை போதித்தல்).

அபூர்வதையென்ரு லென்னை?

தேகியென்போன் பிரமாணங்களுக்கப்பாற்பட்டவன் என்பது. (அதாவது மேலேயப்பியாசித்த அச்சித்தில் அதீதமாதல்)

பலமென்ருலென்னை?

துரியாதீதம் யாவுமாநிறைந்திருக்கின்றபடியால் அதனையறிதல் யாவையுமறிந்ததென்பது.

அர்த்தவாதமென்ருலென்னை?

கூடஸ்தசொரூபமாகவிளங்கும் பிரம்மத்திற்கிடையில் பஞ்சகிருத்தியங்களையும் கர்த்திருத்துவத்தையும் உளவாகச் சாதிப்பது.

உற்பத்தியென்றுலென்னை?

கடத்திற்கு மண்ணையும், நூலுக்கு கோசகாரப்புழுவையும் உபாதான மெனக்கூறுவதுபோல் பிரம்மமே ஜகத்திற்கு முதற்காரணமெனல்.

சிரவணத்திற்குப்பின் அடுத்துவரும் மனனத்திற்குத் துணைக் கருவிகள் யாவன? யுக்தி, தர்க்கம், அனுமானம் என்பன

மேற்கூறிய மூன்றனுள் ஜீவர்களனேகமெனவும், ஏகமெனவும், எந்தெந்த மதங்கள் வாதித்துக்கொண்டிருக்கின்றன?

சாங்கியமுதலிய மதங்கள் (அதாவது சாங்கியமதத்தில் ஏகமெனவும் ஏனைய மதத்தில் அநேகமெனவும் கொள்க)

எவ்வுயிருமெவ்விதம் சம்மந்தப்பட்டிருக்கிறது?

தனித்தனி தேகங்கள் தோறும்,

ஆதலாலிவ்வுடம்பும், இவ்வுடம்பாலனுபவிக்கும் யோகசாதனமும் யாருக்கெனக் கூறுக? இவனுக்கேயன்றி யேனையோர்க்கன்று

எவ்விதமிவனுக்காகும்? வாய்த்ததேகம் இவன் முன்செய்த வினை காரணமாக வந்ததினுலிவ்வினை யிவனுக்கேயுரியது.

பூர்வஜென்மவுடம்பை யானென்றபிமானித்த வினை பூர்வஜென்ம வுடலைச்சேர்ந்த உயிர்களனைத்திற்குமில்லையோ?

இல்லை, உண்டெனில் அனவஸ்தாதோஷம் வந்தேதீரும்.

ஏகான்மபக்ஷத்தில் போகமுண்டோ? இல்லை.

அநேகான்மபக்ஷத்தில் போகமுண்டோ?

கொண்டாலு மில்லையெனவரும்.

ஆனுல் மேற்கூறியவை யிருபக்ஷத்திற்குமொக்குமாயினும், பிம்பப் பிரதிபிம்பநியாயத்தாலும், கரணஅசைவாலும் எதுகற்பிதம் எது யதார்த்த மென யுக்திபூர்வமாகக்கூறுக?

பிம்பப்பிரதிபிம்ப நியாயமாவது :- ஏகாத்மபக்ஷத்தில் பிம்பமாகிய ஆத்மா கரண ஜலத்தில் பிரதிபிம்பமாகிப் பலவிதமாயிருப்பதால் பலவித மான போகானுபவங்கூடும், பிரதிபிம்பம்போலனேகாண்மபக்ஷம், விம்பம் போலேகான்பக்ஷம், ஆதலால் அநேகான்மபக்ஷங் கற்பிதமாகவும், ஏகான்ம பக்ஷம் யதார்த்தமாகவும் கொள்ளுதல் யுக்தி.

தர்க்கம், அனுமானம் இவைகளைப்பற்றி யிவட்ம்கூறுவது அவசியமோ?

இவைகளை மிசிராசாரியர் முதலினோர் கண்டனஞ்செய்திருப்பதாலும் இந்நூல் ஸ்வானுபவத்தை விரித்தலாலும், இவ்விரண்டையும் பற்றிக் கூறுவது அனுவசியம்.

இனி:- நிதித்தியாசனத்துக்கு அங்கமாயுள்ள யோகமெத்தனை?

மந்திரயோகம், பரிசயோகம், பாவயோகம், அபாவயோகம், மகாயோகம் எனவைந்து.

இவற்றுள்:- மந்திரயோகமெனிலென்னை?

பிரணவமுதலிய மந்திரங்களைச் சிந்தித்தலால் சிவோதயமாயதில் மனமிறத்தல்.

பரிசயோகமெனிலென்னை? ஷை மந்திரயோகத்தோடு விவகரிக்கு மனமும், பிராணவாயுவும், மூலாதாரத்திற்சேர்ந்து, சுழிமுனைவழியாய்ச் சென்று சிரசின்மத்தியில் ஆத்மஜோதியில் மனம்அசையாது லயித்திருப்பது

பாவயோகமெனிலென்னை?

சிரசு சுவர்க்கமும், காது திக்குகளும், இரு நேத்திரங்கள் சூரிய சந்திரர்களும், நெற்றிக்கண் அக்கினியும், இவைகளிருக்கவமைந்தமுகமும். நாபி ஆகாயமும், பாதம் நிலமும், பெரியபுஜங்களும், புஜங்களுக்குத்தக்க ஆயுதங்களும், ஆபரணங்களும் (தனக்கலங்காரமாகிய விராட்புருட வடிவும்) இவைகளொவ்வொன்றையுநியதிகளைந்து மிஞ்சிய அவயவியாகிய பிரம்மமெதார்த்தமெனவதில் மனம்லயிப்பது.

அபாவயோகமெனிலென்னை?

மனத்தாலெட்டமுடியாத பிரமத்திலயமடைதல்.

மகாயோகமெனிலென்னை?

சிருஷ்டி, சம்ஹாரம், ஞானம், அஞ்ஞானம் இக்காலங்களில் ஒருபடித்தாகநின்று தானேதானுக விளங்கும் பிரமத்தின்கண் மனம் லயமாதல்,

மேற்கூறியவைந்துயோகங்களின் கருத்தென்னை?

நிதித்தியாசனத்துக்கு அங்கமாகவும், சமாதிக்கு அனுகூலமாகவும் கண்டு அதீதமாகிய வஸ்துவை யனுஷ்டிக்க.

பிரம்மானுபவமுண்டாதற்கு இடையூரான பிரதிபந்தங்கள் எத்தனை?

பூதப்பிரதிபந்தம், வர்த்தமானப்பிரதிபந்தம், ஆகாமியப்பிரதிபந்தம் என மூன்று.

பிரதிபந்தமென்பதற்கு அர்த்தமென்னை?

தனக்கு வேருகநின்று பந்திப்பது.

இவற்றுள்:- பூதப்பிரதிபந்தமென்ருலென்னை?

முக்தியடைய மிகவுமாசையோடுதுறந்து குருவையடையவேண்டிய வாறடைந்து, மகிழ்ந்து, சிரவண முதலியவற்றைத் தெளியப்பெரினும் முன்னனுபவித்த *வனிதாதிவிஷய சுகவாசனையால் மனநிலைகலக்கி உயிர் தனது எதார்த்தநிலையை யடையாமற்போகும்படி செய்தல் (இ∴திறந்த காலத்தைக் காட்டுகிறது).

வரத்தமான பிரதிபந்தமென்ருலென்னை?

விஷய இச்சையும், அபிமானமும், சாபல்யமுதலிய ஈனகுணங்களை அடைதலின் முன்னரெதார்த்தந்தெரிந்திருந்தும் இப்போது அடையாமற் செய்தல். (இ∴தெதிர்காலத்தைக்காட்டுகிறது.

ஆகாமியப்பிரதிபந்தமென்ருலென்னை?

இன்னுஞ்சிலபிறவிகளெடுத்தாலன்றிச் சத்தியலோக முதலியவற்றில் வைத்தவிச்சையென்னுந்தோஷம் விடாது அவற்றோடு மறைப்பொருளை யுணர்ந்திடினுமான்மவுண்மை யடையாமற்செய்தல்.(இ∴து நிகழ்காலத்தைக் காட்டுகிறது)

மேற்கூறிய பிரதிபந்தங்களை கடக்கும்விதம் யாது?

ஞானம், வைராகம், உபரதி இம்மூன்ருலும்.

இம்மூன்றுக்குமுறையேயியைந்த லக்ஷணம் யாது?

காரணம், சொரூபம், காரியம்,

இவற்றுள்:- ஞானத்திற்கியைந்த காரணம், சொரூபம், காரியம் இவைகளை விளக்குக? ஞானமடையவேண்டியதற்குச் சிரவணம், மனனம், நிதித்தியாசனம் காரணம். ஆத்மசொரூபமும், மூல அகங்காரமும், வேறெனப்பகுத்துக்காட்டல் சொரூபம். அகங்காரப்பிராந்திக்கு ஆத்மா சாக்ஷியாநின்று விளங்கல் காரியம்.

---

*வனிதாதி =பஞ்சனை, சௌக்கியபோஜனம், கந்தம், வஸ்திரம், ஆபரணம், தயிலம், தாம்பூலம் என்பன.

வைராக்கியத்திற்கியைந்த காரணம், சொரூபம், காரியம் இவைகளை விளக்குக? வனிதாதி விஷயங்களிற் குற்றங்களைக்காணுதல் காரணம். ஷை குற்றங்களை நீக்கமுயலுதல் சொரூபம். மேலேநீக்கியதைப் பின்னர் வராமற்காப்பது காரியம்.

உபரதிக்கியைந்த காரணம், சொரூபம், காரியம் இவைகளை விளக்குக? இயமநியமாதிகளை விடாதுசெய்தல் காரணம் மனமொடுங்கல் சொரூபம். பகிர்முகவிவகாரத்தில் மறுபடியும் வருமயக்கநீங்குதல்காரியம்.

மேற்கூறிய ஞானம், வைராக்கியம், உபரதி இவைகளால் எந்தெந்தப் பிரதிபந்தங்கணீங்கும்? ஞானத்தால் ஆகாமியப்பிரதிபந்தமும், வைராக்கியத்தால் வர்த்தமானப் பிரதிபந்தமும், உபரதியால் பூதப்பிரதிபந்தமும் நீங்கும்.

ஞானம், வைராக்கியம், உபரதி, இவைகட்கு அவதியாவன?

ஞானத்திற்கவதி = தேகத்தையாத்மாவாகப்பாவித்த பாவம்போல் பிரமத்தைத்தானுகப் பாவிக்குந்திடம். வைராக்கியத்திற்கவதி = சத்திய லோகமுதலிய பதப்பிராப்திகளைத் துரும்பாக நினைத்தல். உபரதிக்கவதி = சேஷ்டைகளனைத்தையுஞ் சுழுத்தியவஸ்தையிலிருப்பவனைப்போல் நினையாதிருத்தல்.

தேற்கூறிய ஞானதிமூன்றும் யாதுகாரணம்பற்றியொருகவடையத் தக்கது? பிறவிதோறும் விடாதுபுரிந்த மகாத்தபத்தின் வலிமையினுல்.

ஆனுல் வைராகம் உபரதி யிரண்டுமாத்திரம் வாய்த்து ஞானம் வாய்க்காவிடில் முக்திகூடுமோ? அரிது.

அரிதெனில் பின்னரென்னதான் கிடைக்கும்?

சத்தியலோக முதலிய பதப்பிராப்திகள் கிடைக்கும்.

வைராக்கியம், உபரதி யிரண்டுமின்றி ஞானமாத்திரமடைவனெனில் முக்தியுண்டோ? உண்டு.

முக்தியுண்டென்பதை யுவமானபூர்வமாகக்கூறுக?

முறிந்துவிழப்போகிற மரத்தின்கிளையிலேறிநிற்போன் விழுதற்குப் பிரியமின்றேனு மரமுறிந்துவிழ அதனேடுதான்சேர்ந்து விழுதல்போல் தேகாந்தத்திலைக்கியமுக்தி யடைவன்.

ஆனுல் தேகத்திற்கேற்பட்ட வினைகாரணமாக வருந்துக்க மெவ் விதந்தீரும்? அனுபவித்துத்தீரவேணுமென்பது சத்தியம்.

ஞானமபரோக்ஷமாத்றகேதுவான சமாதிக்குச் சாதனமாயுள்ள ஞானபூமிகள் யாவன? சுபேக்ஷே, விசாரணே, தனுமானசி, சத்துவாபத்தி, அசம்சத்தி, பதார்த்தாபாவனே, துரியம் அல்லது துரியாதீதம்ஆக பூமிகள் 7.

இவற்றுள்:- சுபேக்ஷை யாது?

என்னையானறியாமலிருந்தது யாதினுல்;

அதனைச்சுருதிகுருவினுலறியவேண்டுமென நினைப்பது.

விசாரணே யாது? மகாவாக்கியத்தாலும், பிரம்மோபதேசத்தாலும் விளங்கும் ஞானம் சிறிதுதயமாகி அதனுல் பதப்பிராப்திகளைத் துரும்பாக நினைத்து அனுத்மாவைநீக்கி ஆத்மாவை சதாவிசாரித்தல்,

தனுமானசி யாது? விஷயவலிதானே நசித்தல்.

சத்துவாபத்தி யாது? ஜாக்கிரப்பிரபஞ்சத்தைக் கனவாகநினைத்து ஆத்மாவின் யதார்த்தசொருபத்தை யுண்மையாகக்கருதல்,

அசம்சத்தி யாது? உலகென்பது தோன்றுது சுழுப்தியவஸ்தை யுடையவனைப்போல் அறிவுமாத்திரமாகநிற்றல்.

பதார்த்தாபாவனே யாது? வாசனைநீங்கி அதிகநித்திரையுடையோன் போல் ஆத்மா தனதானந்தத்தில் ஒடுங்கல்.

துரியம் அல்லது துரியாதீதம் யாது?

உண்டில்லையென்று சொல்லாமல் அகம்புறவிவகாரநீங்கி அறிவே வடிவாயுள்ள அத்துவிதபதத்தில் சூன்யமாக நின்றநிலை.

இவ்வேழுபூமிகளில் முதன்மூன்றையு மற்றையநான்கையு மென்ன பூமியென்று கூறுவர்? முதல்மூன்றை அப்பியா பூமியெனவும், மற்றைய நான்கை அனுபவபூமியெனவும் கூறுவர்.

ஷை பூமிகளை அவஸ்தாருபமாகவுங் கூறுவதுண்டோ?

முதல்மூன்றை ஜாக்கிரமெனவும், நான்கைச் சுவப்னமெனவும், ஐந்தைச் சுழுப்தியெனவும், ஆறையும், ஏழையும் - துரியம், துரியாதீதமெனவும் கூறுவதுண்டு.

பூமிமுறையாக முக்தர்களின் தாரதம்மியங்களைக் கூறுக?

நான்காவது பிரம்மவித்து, ஐந்தாவது பிரம்மவரன், ஆருவது பிரம்மவரியான், ஏழாவது பிரம்மவரிஷ்டன் என்பன.

உபரதியடைந்தபின் விளங்கும் சட்சமாதிகளின் பெயரும், அதின் வகுப்புங்கூறுக? திரிசியானுவித்தம், சத்தானுவித்தம், நிர்விகற்பம்; இவற்றை முறையே புறச்சமாதிமூன்றும், அகச்சமாதிமூன்றுமாக வகுக்கப் பட்டிருக்கின்றன.

இவற்றுள்;- புறம், அகமெனிலென்னே? திரிசியத்தில் தன்னைக் காண்பது புறம். அந்தக்கரணத்தில் தன்னைக்காண்பது அகம்.

புறத்துத்திரிசியானுவித்தப் பெயரைக்கொண்ட சவ்விகற்பசமாதி யெனிலென்னே? மாயையின் தன்மையாகிய திரிசியக்கற்பனைவிட்டுப் பிரமானுசந்தானம் செய்தல்.

புறத்துச்சத்தானுவித்தமெனிலென்னே? சச்சிதானந்த சொரூபத்தைக் கண்டு அதுதானென்றே விடாது தியானித்தல்.

புறத்துநிர்விகற்பமெனிலென்னே?

பிரம்மானந்தநிலையில் மனமொடுங்கி அலையிலாக்கடல்போலமைதி பெற்றிருப்பது,

அகத்திரிசியானுவித்தப் பெயரைக் கொண்ட சவ்விகற்பமெனி லென்னே? காமக்குரோதாதிகளைவிட்டு சாக்ஷியே தானென்று கருதுதல்.

அகச்சத்தானுவித்தமெனிலென்னே?

சச்சிதானந்தமே யாத்மாவெனச் சிந்தித்தல்

அகநிர்விகற்பமெனிலென்னே?

முற்கூறிய சத்தானுவித்தம், திரிசியானுவித்தம் இவைகளிரண்டு மகன்று அசைவிலாத்தீபம்போல் பந்தசம்பந்தமற்றிருத்தல்.

ஆதலால் யோகீஸ்வரனுக்கு எப்போது சமாதிகூடும்?

இவ்வாறுவிதசமாதியாலும் பற்றில்லாததால் மனஞ்சென்றவிட மெல்லாம் சமாதி.

இச்சமாதிகளாலனுபவமான ஞானத்திற்குப் பலமெத்தனை?

துக்காபாவம், சர்வகாமாப்திகம், கிருதகிருத்தியம், பிராப்திப் பிராப்பியம் என நான்கு.

இவற்றுள்:- துக்காபாவம் யாது? இகபரத்தாலிரண்டாம். இவற்றுள் ஸ்தூலதேகத்தில் குரூபத்துவமும், துர்க்கந்தமும், சதாவியாதிகளும்,

மற்றவையுமாம் ஸூக்ஷமதேகத்தில் காமக்குரோத முதலியவைகளும், காரணதேகமாகிற அவித்தையில் ஆதிவியாதிகளுக்கு விதையாயுள்ள பூர்வவாசனையும், இகலோகத்துக்கமாம். போகமும், போக்தாவும் வேறின்மையால் ஞானிக்கந்தத் துக்கங்களில்லாதிருத்தல் இகலோகதுக்காபாவம். பரலோக துக்காபாவமாவது:- ஆத்மநிலையடைந்தவுடன் தாமரைநீர்போல் ஞானி யிருவினைகளையடையமாட்டானுதலாலும், விரகிலக்கினியுண்டு, அக்கினியில் விரகில்லைப்போலும். கன்மானுஷ்டானங்களி லொருவனிருப்பன், அவனிடத்திலொரு கர்மானுஷ்டானமில்லைப்போலும், தீப்பற்றியெரியும் வனத்தில் மான முதலிய மிருகங்கள் எவ்விதமோடிப்போமோ அதுபோல யாதொரு கலக்கமின்றி அறிவேவடிவா விளங்குபவனை வினையணுகாதுபோலவும் பரலோகச்சிந்தையுண்டாகாதிருக்குநிலை.

சர்வகாமாப்திகம் யாது? கிஞ்சிக்ஞத்வம், சர்வக்ஞத்வங்களில் உண்டானவானந்தங்களனைத்தையுந் தனதம்ஸமாகக்கண்டு ஞானி யவற்றிற்கதீதமான நிரதிசயானந்தமாயிருத்தல்.

கிஞ்சிக்ஞத்வசர்வக்ஞத்வங்களிலுண்டானவானந்தங்கள் யாவன? மனுஷானந்தம், மனுஷகந்தர்வானந்தம், தேவகந்தர்வானந்தம், பிதுரானந்தம், ஆசானசதேவாவானந்தம், கருமதேவானந்தம், தேவானந்தம், இந்திரானந்தம், பிரகஸ்பதியானந்தம், பிரஜாபதியானந்தம். விராட்டானந்தம், இரண்யகர்ப்பானந்தம் என 12.

கிருதகிருத்தியம் யாது? இகலோக நிமித்தம் சரீரயாத்திரைக்கு வேண்டிய வாணிப, கோபாலனமாதிகளும்; பரலோகநிமித்தம் லிங்கசரீரயாத்திரைக்காக யாகாதிகளும்; நிர்வாணசுகநிமித்தம் ஆத்ம யாத்திரைக்கு வேண்டிய சிரவணுதிகளும்; ஞானமடைந்தபின் எல்லாந் தன்மயமாயிருத்தலா லிவையாவுஞ் செய்துஞ்செய்யாமல் சுயமாவிளங்கல்.

ஆனல் ஞானிக்குக் கர்மங்களில்லையென்பதை யுவமானபூர்வமாகக் கூறுக? பலகணி துவாரத்தில் தோன்றுகின்ற அணுக்கூட்டங்கள் சூரியனுடைய வதிக ஒளியிலெவ்விதந் தோற்ருதோவதுபோல அறிவீனர்கள் செய்யும் விஷயபலங் காரணமாகவருங் கர்மங்கள் ஞானியிடந்தோன்ருது.

பிராப்திப்பிராப்பியம் யாது? புண்ணியபரிபாகம், மோக்ஷேச்சை, குருசிஷ்ருஷை, பிரபலசுருதிவிசாரம், சிரவணுதி, ஞானுஞ்ஞானவிவேகம், அஞ்ஞானநாசம். உண்மைஞானம், சம்சாரதுக்கநிவர்த்தி, நிஜானந்தப்பேறு ஆகிய பத்துவிதப் பதங்கள்.

கொடை யாது?

தன்னிடத்திலுள்ள வஸ்துக்களை விரும்பினவரிடத்திற் கொடுத்தல்.

அபயம் யாது? சரணுகதியடைந்தவனைக் காக்குந்தன்மை.

நிருமதம் யாது?

தனது நிச்சயமிவ்விதமெனத் தெரிந்திருந்து மகங்காரமின்மை யாயிருத்தல்.

ஜீவன்முக்தனுல் சீடர் முதலானோர்களடையும் பிரயோஜனங்கள் யாவன? ஜீவன்முக்தனைச் சிவவடிவமாகநம்பி யிவர்நம்மை யிரக்ஷிக்கத் தக்கவரென்று சரணுகதியடைந்து அவர் பிரம்மோபதேசத்தினுல் சீடர்களுக்கு முக்தியும், மிகுந்த அன்போடு வந்தனைவழிபாட்டைச் செய்யும் பக்தர்களுக்கு ஈஸ்வரார்ப்பணமாகச்செய்யுஞ் சற்கிருத்தியமும், அவர் சரித்திரத்தினுல் விளங்கிய பெருமையை யறிந்திருந்துஞ் செல்வச் செருக்கினுல் லக்ஷயமில்லாத வுதாசீனர்களுக்குப் புண்ணியக்ஷயமும, அவருருவத்தைப் பார்த்தன் முதலியவைகளாற் பாவிகளுக்குப் பாவநீங்குமெனச் சத்துக்கள் கூறுவர்,

கர்த்திருத்துவமில்லாத ஜீவன்முக்தர்களுக்குத் தர்க்காதிமுதலியவற்றைக்கொண்டு பிரம்மோபதேசமெவ்விதங்கூடும்?

மறைப்பெனலில்லாத பிரம்மசொரூபமாதலினுல் மகிழ்ச்சிவெறுப்பிலா ஈஸ்வரனுக்குச் சற்கிருத்தியமுடையோராலனுக்கிரகஞ்செய்தலும், தீவினையுடையோரால் வெறுப்புச்செய்தலுமாகிய தொழில்கள் எவ்விதம் வாய்க்குமோவதுபோல் அப்பியாசிகளுடைய பக்குவபேதத்தால் சிறந்த அனுக்கிரகஞ்செய்தன் முதலியவைகள் ஜீவன் முக்தனுக்குக்கூடும்.

ஜீவன்முக்தர்களொருபடித்தாயிராமற் பலவிதமாயிருப்பது யாதினுல்?

பிராரப்தசம்ஸ்காரபேதத்தினுல்.

சம்ஸ்காரமெத்தனை வகைப்படும்?

தீவிரம, மத்தியம், மந்தம், சுத்தம் என நான்கு.

இவற்றுள்;- தீவிரம் யாது? ஞானி போகத்திலழுந்தி யாத்மானந்தமாயிருத்தல் (பிரம்மவித்து).

மத்தியம் யாது? விஷயபோகங்களிலிருப்பினு மாத்மஸ்வரூபமாய் வினோதங்களைச்செய்து பாலரைப்போலிருத்தல் (பிரம்மவரன்).

மந்தம் யாது? விஷயபோகங்களையெல்லாமொழித்து ஆனந்தமாயிருத்தல் (பிரம்மவரியான்).

உபேக்ஷையெனிலென்னை?

உலகத்தில் தீங்குசெய்யும்பாவிகளை விருப்புவெறுப்பின்றி நீக்குதல்.

மேற்கூறியவையன்றி ஜீவன்முக்தற்குரிய பயன்கள் யாவன?

ஞானரக்ஷை, தவம், சம்வாதம். துக்கநிவர்த்தி, சுகாவிற்பாவமென 5

இவற்றுள்:- ஞானரக்ஷையெனிலென்னை?

வாசனுநாசமும், மனதையடக்குதலால் புத்திநிர்மலமாயுமிருத்தல்.

தவமெனிலென்னை?

மனத்திற்கும், ஐம்பொறிகட்கும் ஒருமைகொள்ளுதல்.

சம்வாதமெனிலென்னை? ஞானியெனவுலகிலுள்ளோர் வழிபடுதல்.

துக்கநிவர்த்தியெனிலென்னை? மனக்கிலேசநீங்கல்.

சுகாவிற்பாவமெனிலென்னை?

மேல்சொல்லிய ஞானரக்ஷை, தவம், சம்வாதம், துக்கநிவர்த்தி இவைகளாற் பந்தநீங்கி யானந்தமுண்டாதல்.

ஜீவன் முக்தர்களுக்குள்ள அடையாளங்களெத்தனை?

குரோதமின்மை, வைராக்கியம், ஐம்பொறியடக்கல், ஜனப் பிரியத்துவம், சமை, தமை, அலோபம், கொடை, அபயம், நிருமதம் என பத்தாம்.

இவற்றுள்:- குரோதமின்மையாது?

தனக்கு வேருன வஸ்துவொன்றில்லாமையால்.

வைராக்கியம் யாது? நிராசையுற்றிருப்பது.

ஐம்பொறியடக்கல் யாது?

பொறிகளை பகிர்முகத்திற்செலுத்தாமலறிவிற் செலுத்துவது.

சமை யாது? அகத்திற் கற்பனையெழாமலடக்கி யறிவிற்செலுத்துவது.

தமை யாது? புறத்திற் கற்பனையெழாமலடக்கி யறிவிற்செலுத்துவது.

ஜனப் பிரியத்துவம் யாது? சாதுசங்கப்பிரியம்.

அலோபம் யாது?

தானடைந்ததுபோல் மற்றவருமடையவேணுமென்ற அன்பு.

வருத்தவிதை புசிக்க யோக்கியதையே தவிர முளைப்பதற்கில்லை யாதலால் பிராரப்தம் புசித்துத்தீரல்வேண்டும். இப்படிப்புசிப்பதாலாகாமியம் வரவிடமில்லை. ஆதலால் பிறவியுண்டுபண்ணத் தான் காரணமாகாது.

மனுவியாசாதிய மகான்கள் பத்துத்தேககமடுத்தும், மனிதர் ஒருதேகமெடுத்து மனுபவித்தாலன்றிப் பிராரப்தவினை யொழியாதென்ரு லிவர்களுக்குள்ள வித்தியாசமுங் கருத்துமென்னை? மனுவியாசாதி வினை தெரிந்தனுபவிப்பார்கள்; மனிதர்களோ தெரியாமலனுபவிப்பார்கள் மேலும், ஓர் ஜென்மத்திற்கும் பத்து ஜென்மத்திற்கும் பிராரப்தமொன்ருயமைந் திருக்கிறதென்றும் வெளியாகிறது

ஞானிக்கு வினையனுபவித்தலெங்ஙனங்கூடுமென்றும் இவை யொன்றற்கொன்று விரோதமோவென்றுங்கூறுக?

சொற்பனத்திலாலிங்கனம் போகானுபவமுதலியவைகள் வருவது போல் ஞானிக்குப் பிராரப்தங்கூடும். ஆதலால் இவைகளுக்கு விரோத மின்று.

ஞாதுருஞேயத்திற் பிரபஞ்சந்தோற்ருதிருக்கப் பிராரப்தமெவ்வித மனுபவிப்பதென்பதற்கு நிருபாதிகப்பிரமை; சோபாதிகப்பிரமை யிவைகளின் லக்ஷணபூர்வமாகச் சமாதானங்கூறுக? கிளிஞ்சில்வெள்ளி யெவ்விதங் கெடுமோ வதுபோல் விசாரஞானத்தாலஞ்ஞானங்கெடும், கெடவே பிரபஞ்சத்தோற்றமில்லை. இது பிராந்தியால் வந்த கிளிஞ்சில் வெள்ளி - நிருபாதிகப்பிரமை, ஜெகம் சோபாதிகப்பிரமையாதலினுல் நீரின் கண் தான் தலைகீழாயிருத்தல் பொய்யெனத்தெரிந்தும் அத்தோற்ற நீங்காதது போல ஞானமயமாகிய தனக்கு ஜீவேஸ்வரஜகத்தாய்த்தோற்றுதல் பொய் யெனத்தெரிந்து மவைநீங்காமல் தோற்றலால் பிராரப்தமனுபவித்தே தீர வேண்டும்.

ஜீவன்முக்தர்களுக்குள்ளள மைத்திரியாதி குணங்கள் யாவன?
மைத்திரி, கருணை, முதிதம், உபேக்ஷை என நான்காம்.

இவற்றுள்:- மைத்திரியெனிலென்னை?
சத்துக்களிடத்தி லன்புவைத்தல்.

கருணையெனிலென்னை?
துக்கமுள்ளவர்களிடத்தி லிரக்கம்வைத்தல்.

முகிதமெனிலென்னை?
நிஷ்காமபுண்ணியரிடத்தில்வைக்கும் விருப்பம்.

இனி முக்தியெத்தனை வகை? ஜீவன்முக்தி, விதேகமுக்தி எனவிரண்டு.

இவற்றுள்:- ஜீவன்முக்தியெனிலென்னை? சுவானுபவத்தால் அஞ்ஞான மணுமணுவாயகன்றும், தன்தேகத்தில் அழுத்தவபிமான மின்றியும், பிராரப்தமாகிற அனுபவந் தன்னிடத்திலிருந்தபோதிலும் சுழுப்தி போலும், பாலர், உன்மத்தர்போலும் தன்னிடத்தில் தினையளவுந்தோன்ருது தேகமுதலியவைகளில் அபிமான நீங்கியபோதிலும் குலாலன்கடமெடுத்த பின்புஞ் சக்கரஞ்சுழல்வதுபோல் முன்னனுபவித்த வாசனையின் சேஷத்தால் தேகஞ் சொற்பகாலமிருத்தல்.

ஆனல் ஞானம்வந்தபின் மாயை நசிக்கின் அதன் காரியமான ஸ்தூலதேகமிருக்குமோ? தக்தமான வஸ்திரம் காற்றடிக்கும்வரை யிருப்பதுபோல் ஞானத்தீயினுல் தக்தமான தேகம் பிராரப்தமுடியும்வரை யிருக்கும்

விதேகமுக்தியெனிலென்னை? சூரியப்பிரகாசத்தின்முன் அந்தகாரம தன்மயமாவதுபோல ஞானசூரியன்முன் ஜீவேஸ்வரஜகத்து அதன் மயமாயாதல்.

விதேகமுக்தியைப்பார்க்கிலும் ஞானிக்குடம்போடு கூடியிருப்பது உரித்தான ஜீவன்முக்தியென் றெவ்விதமேற்கப்படும்?

பிரம்மஞ்ஞானமுதயமானபோதே யஞ்ஞானநசிக்கும். அத்துடன் தேகஸ்மரணையுமொழியும், அங்ஙன மொழியில் பிரம்மவித்தையின் சம்பிரதாயநிலைமை யொருவருக்குந் தெரியாதொழியும். ஆதலால் பரமசிவனுல் பிரமனும், பிரமனுல் பிரஜாபதியும், பிரஜாபதியால் மனுவும், மனுவினுல் மனிதர்களுமறிந்தார்களென்ற சாம்பிரதாய நிலைமையைச் சொல்லுஞ் சுருதிக்கு விரோதமாகுமாதலாலு ஞானிக்குடம்போடு கூடியிருப்பது உரித்தான ஜீவன்முக்தியேயாம்.

ஜீவன்முக்தர்களின் சஞ்சித, பிராரப்த, ஆகாமிய வினைகளெவ்வித நீங்கும்? சஞ்சிதம் = அக்கினியில்விழுந்த துரும்புபோல் ஞானத்தீயினு லெரிந்துவிடும். பிராரப்தம் = அனுபவித்தே தீரல் வேண்டும். ஆகாமியம் = பிரம்மானு சந்தானத்தினு லினிப்பிறத்தற்கதிகாரியல்லனென்று நசித்துப் போகும்.

ஞானத்தால் நசித்த சஞ்சிதம் பிராரப்தபோகத்தைக் கொடுக்கு மெனில் அப்பிராரப்தங் காரணமாகவரும் ஆகாமியம் ஜென்மத்தைத் தராதென்பதற்குவமான பூர்வமாகச் சமாதானங்கூறுக?

சுத்தம் யாது?

லௌகீகம்விட்டுப் பரமான்மாவிலானந்தமாயிருத்தல், (பிரம்மவரிஷ்டன்).

ஆறுல் பிராரப்தவாசனையால் ஜீவன் முக்தாள் பலவொழுக்கங்களை யனுஷ்டித்தபோதிலு முடிவாயவாளடையும் பிரயோஜனமிதுவென்றுவமான பூர்வமாகச்சுருக்கி விளக்குக? நேராகவும் கோணலாகவுஞ் செல்லுகின்ற நதிகள் சமுத்திரத்தில் விழுதலெங்ஙனமோவதுபோல மோக்ஷமொன்றேயாம்

மேலேகூறிய நான்குவிதமான பிராரப்தவாசனை யெவ்விதந்தீரும்?

இச்சை, அனிச்சை, பிறரிச்சை என மூன்று விதமாகவனுபவித்துத் தீரும்.

வேறுவிதமாகவாவது இப்பிராரப்தத்தை யனுபவிக்காமல் தடுக்க முடியுமோ? தேவர்களாலுந் தடுக்கமுடியாது.

முன்னர்கூறிய மூன்றில்:- இச்சாப்பிராரப்தம் யாது?

அனுபவிக்கக்கூடாததவையென் றறிந்திருந்துந் தானதைக் கவனியாது மதுமாமிசாதிகளையனுபவிக்கவருவது

அநிச்சாப்பிராரப்தம் யாது?

தனக்குப் பிரியமில்லாமலிருந்தபோதிலுமதையனுபவிக்கச்செய்வது.

பிறரிச்சாப்பிராரப்தம் யாது? இச்சை, அனிச்சை இவை யிரண்டு மின்றிப் பிறரன்புபற்றி யனுபவிக்கவருவது.

இம்மூன்றிச்சைகளால் பிராரப்தமெவ்விதம் க்ஷயமாகும்?

விருப்பு, வெறுப்பு, உபேக்ஷை இவைகளான் முறையே யனுபவித்துத் தீர்வது பிராரப்தக்ஷயம்.

ஜீவன்முக்தர்களினெழுக்கம் பலவாயினுமவர்கணிச்சயமொன்றே யெனவின்னுமுதாரணபூர்வமாகக்கூறுக? வஷிஷ்டர், நாரதர், துருவாசர், வியாசர், சுகர், வாமதேவர், ஜனகர், பரதர், கௌதமர் இவர்கணடை பலவாயிருந்தபோதிலு நிச்சயமொன்றேயாம்.

இனி.- அஞ்ஞானிக்கும் ஞானிக்கும் வித்தியாச மென்னை?

* விராத்திரியருக்குஞ் * சுரோத்திரியருக்கும் வேதாத்தியயன மில்லாததனுலும் வேதாத்தியயனமுண்டாதலாலும் பேதமேதவிற உண்டுறங்கன்முதலியவைகளாற் பேதமில்லையதுபோல் பந்தமுறல், பந்த நிவர்த்தி யிவையாற் பேதமேயன்றிச் சுகதுக்கபோகமாகிய பிராரப்தத்தை யனுபவிக்குமாதிரியா லஞ்ஞானிக்கும், ஞானிக்கும் வித்தியாசமில்லை யெனச் சத்துக்கள் கூறுவர்.

உண்மை ஞானத்தினுல் பிரம்மநிலையடைந்திடிலெங்ஙனஞ் சீவத்துவ நசிக்குமென்பதை விளக்குக? கோபக்கண்களையும் வரிகளையுமுடைய புலியைக்கண்டோ னெங்ஙனமாவனேவதுபோல் ஜீவத்துவநசிக்கும்.

*விராத்திரியனென்னிலென்னை? மறையின்மை – அதாவது அனுலோமப் பெண்ணிற்கும், பிரதிலோமவானுக்கும் பிறந்தவன். அனுலோமப்பெண் கீழானபீஜத்திற்குமுயர்ந்தயோனிக்கும் பிறந்தவள். பிரதிலோமன் மேலான பீஜத்திற்கும் கீழானயோனிக்கும் பிறந்தவன்.

** சுரோத்திரியனெனி லென்னை?
வேதாத்தியயனஞ்செய்யத் தக்கவந்தணன்.

ஜீவன் றன்கற்பனையை நாசமாக்கிப் பிரம்மமாதற்குடன்படுமோ வென்பதற்குவமானபூர்வமாக விளக்குக?

ஒருவன் தேவத்தன்மையையனத்தற்குக் கங்கை முதலியவைகளில் மானிடத்தன்மையை யெவ்விதமொழிப்பேனே வதுபோல ஜீவன் தன் கற்பனையை நாசமாக்கிப் பிரம்மமாதற்குடன்படும்.

ஜீவன்முக்தர்களுக்கு முன்னுள்ள ரிஷிகளைப்போற் சாபானுக்கிரகச் சாமர்த்தியமில்லையாதலாலிவர்களை ஞானியென்றெவ்விதங் கூறலாம்.

சாபானுக்கிரகச் சாமர்த்தியங் காமியத்தவத்தின்பலன். ஞானத் திற்குக்காரணநிஷ்காமியதவம். ஆதலால் வியாசாதிரிஷிகளிரண்டு தவங் களையுமனுஷ்டித்ததாலவர்களுக்கு ஞானமுஞ்சித்தியுமுண்டு. ஜீவன் முக்தர்களொன்றைமட்டுமனுஷ்டித்ததால் ஞானமட்டுமுண்டு. ஆதலால் ஞானியெனக்கூறத் தடையணுவளவேனுமில்லை.

இப்போதுள்ள ஜீவன்முக்தர்களுக்குச் சாபானுக்கிரகமில்லாதால் கர்மிநிந்தைசெய்வது வழக்கம். அதனுல் யாருக்குக்குறைமென வுவமான பூர்வமாகக்கூறுக? மூடாள் கன்மிகளை நிந்தைசெய்வது வழக்கம். அதனுல் கன்மிகளுக்குக்குறைவில்லை. அதுபோல ஞானிகளைக் கன்மிகணிந்தை செய்வது வழக்கம். அதனுல் ஞானிகளுக்கு யாதொரு குறைவுமில்லை எனில்;- நிந்தித்தவர்க்கே யெல்லாக்குறைவும்,

ஜீவன் முக்தர்கள் தங்களுடைய நானுவிதநடக்கைகளை யெவ்வித மேற்பர்கள்; அந்நியர்களெவ்விதமேற்கவேண்டும்; இவைகளை விவரமாய் விளக்குக? உலகநடையிறந்த ஜீவன்முக்தர்கள் பிராரப்தத்தாலனுபவிக் கின்றவைகளை நானுவாகக்கிரகித்தும், சுவானுபூதியுண்மையை யெடுத்துச் சொல்லியும், உபதேசநெறிகளைச்செய்தும், ஜென்மந்துக்கமெனக்காட்டியும்

தனக்கன்னியமில்லாத பொருளைக் கைக்கொண்டதால் சந்தோஷமும், பலவிதவேஷங்களைச் செய்தும், வஸ்திரந்தரித்தலில்லாமலிருந்தும், அதனை நன்ருயுடுத்தியும், கல்விபயின்றும், அதைப்பயிலாமலும், மாதர்கள்புணர்ச்சி விரும்பியவர்களை நீங்காதிருந்தும், இன்னுமளவிறந்தவிதமாயிருந்தும், இவைகளையெல்லாந்தனது அருள்விளையாட்டென்றே விஸ்வாசித்துச் சீவன்முக்தர்களைச் சிவஸ்வரூபமாக நம்புவாயாக.

விதேககைவல்லியலக்ஷணம் யாது? எக்காலத்திலும், எவ்விடத்திலும், எழுவகைத் தோற்றத்தில் யாதொரு தேகமாகமற்பேதமின்றி யொன்ரு யிருந்த சச்சிதானந்த சிவசொரூபமாயிருத்த லெவற்றினுமேலாய கைவல்லியமெனச் சத்துக்கள் கூருநிற்பர்.

விதேக முக்திநிலையடைதற்கேதுவாகிய நித்தியகர்மானுஷ்டான சோபானமரபு இருபதையுங்கூறி ஷை கைவல்லியத்தை யாவர் விரும்புவ ரென்றுங்கூறுக? நித்தியகன்மானுஷ்டானமும், அத்தாற்புண்ணியமும், அத்தாற்பாவ நாசமும், அத்தாற்சித்தசுத்தியும், அத்தாற் குடும்பத்தால் விளைந்த பந்தத்தளாச்சியும், அத்தான்மெய்த்துறவுபூண்டலும், அத்தான் முக்திவிருப்பும், அத்தாற்புறக்கருமநாசமும். அத்தால் யோகநிலையடைதற் குள்ள முயற்சியும், அத்தாலாத்மப்பிரியமும், அத்தான் மகாவாக்கிய வாராச்சியும், அத்தாலத்துவித ஞானமும், அத்தாலவித்தையாநாசமும், அத்தால் துவிதமயக்கொழிதலும், அத்தாற் சுகதுக்கநினைவொழிதலும், அத்தால்விருப்புவெறுப்பொழிதலும், அத்தால் விதிவிலக்குக் கெய்ப்புண்டாதலும், அத்தால்நல்வினைதீவினைநாசமும், அத்தால் தேகான்ம புத்திநீங்கலும், அத்தாற்பாசமனைத்துமொழிதலும், அத்தாற் பராபரமாகவும் காண்க. எவற்றிற்கும் முடிவாகவும், பெயர், ஜாதி, குறியெனப் பெருது ஏகமாகவும், மனோவாக்குக்கெட்டாத நித்தியானந்தமயமாகவும் விளங்குங் களங்கமற்ற விதேககைவல்லியம் வந்தெய்தும் இதைச்சுருதிகுருவாற் பேரின்பவீட்டையடைதற்கு நெறியாதலினுத்தமர்விரும்புவர்.

இந்நூலின் பெருமையையு மிதையெத்தகைத்துள்ளவதிகாரிக்களித்திட வேண்டுமென்பதையுங்கூறுக? வேதமுதலாயுள்ள சகலநூல்களிலுங் கூறப் பட்டபொருளை விளங்கச்செய்யக்கரதலாமலகம்போற்காட்டி போதமய

மாகிய பேரானந்தத்திலழுத்து மொப்பில்லாதவிந்த ஞானநூலை முக்திபெறற்குரிய சாதனங்களுன்கையுமடைந்து யாவராலேனு மென்றுந்தடுத்தற்கரிய பிறவிநோய் தொலைப்பதற்கெண்ணமுற்று மிக்கவாசைகொண்டு ஞானசாரியனைத்தேடி மனமுருகின்றவன்புடையோரைக்காணின் மகிழ்வுடன் தந்திடுதி.

வேதாந்தசூளாமணி

விஞவிடை

---

முற்றிற்று.

